# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

(மாதப் பத்திரிகை)

இந்தப் பத்திரிகைக்கு ஏஜெண்டுகள் நியமிக்கப்படாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை. முன்பணம் கட்டக்கூடிய பத்திரிகை விற்பனையாளர்கள் தொடர்பு கொள்ளவும்.

**சந்தா விவரம்**

| | |
|---|---|
| வருட சந்தா | ரூ. 15 |
| ஆயுள் சந்தா | ரூ. 180 |
| தனிப் பிரதி | ரூ. 1-50 |

ஆயுள் சந்தாவை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ, மாதம் ரூ. 15 ஆகவோ ஒரு வருடத்திற்குள் செலுத்தலாம்.

வருட சந்தாதாரர்களை ஆயுள் சந்தாதாரர்களாகப் பதிவு செய்து கொள்வதன் மூலம் பத்திரிகையின் வளர்ச்சிக்கு உதவி புரியக் கோருகிறோம். ஆயுள் சந்தா என்பது 35 ஆண்டுகளுக்குப் பத்திரிகை அனுப்பப்படும் என்பதை குறிக்கிறது.

<u>வேண்டுகோள்</u>

1. மக்களுக்கு உணவு உடை வழங்கி உடல் சம்பந்தமான தவைகளைப் பூர்த்தி செய்வது மிகவும் நல்ல உதவி ஆகிறது. கல்வி, தொழில் முதலியவற்றைக் கற்பித்து ஜீவனோபாயத்திற்கு வழிவகுத்துத் தருவது அதனினும் மேலான சேவை ஆகிறது. ஆன்மிக சம்பந்தமான நூல்களைப் படித்தும் கேட்டும் ஆத்மசாதனங்களில் ஈடுபடச் செய்வது தலையாய கைங்கரியமாகிறது. தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞானதானம் என்பது ஆன்றோர் கண்ட உண்மை.

வாசக அன்பர்கள் தங்களின் சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் தமது நண்பர்கள் சிலரையும் சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இந்தப் புனித மதத் தொண்டில் சிரத்தையுடன் ஈடுபடுவது நமக்கும் மற்றவர்களுக்கும் பெருநலன் தரும்.

2. அன்பர்கள் தங்களின் தெய்விகக் கைங்கரியமாக கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது ஒவ்வொரு மாதமும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகவும், தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த வெகுமதியாகவும் அமையும்.

3. அன்பர்கள் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் புதிய சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது மிகப் பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

4. புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள் தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.



தொலைபேசி :
71231

விவரங்களுக்கு :
ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் : சென்னை-600 004

# காந்தியடிகளின் பொன்மொழிகள்

* சத்தியம் என்பது வாய்மை மட்டுமன்று. உள்ளத்தின் உண்மையொளியையும் அது குறிக்கும். சத்திய வஸ்துவும் நித்திய தத்துவமான இறைவனைக் குறிக்கும்.

* குரான், பைபிள் அல்லது கீதை-எதன் மூலம் நோக்கினும் நமக்குக் கடவுள் ஒருவரே. அவர் உண்மை அன்பு மயம். இதை என் வாழ்க்கையில் காட்டுவதைத் தவிர உயிர் வாழ்வதில் வேறு பற்றுதல் எனக்குக் கிடையாது.

* ஒருவனைவிட ஒருவன் உயர்ந்தவன் என்று நினைப்பதே பாவமாகும். கடவுளுக்கும் மனிதருக்குமே எதிராகச் செய்யும் பாவமாகும். ஆகவே அந்தஸ்தில் வித்தியாசங்களை வற்புறுத்தும் சாதி முறை ஒரு பெரும் தீமையாகும்.

### பிரசிடெண்ட் மகராஜ் வருகை

ஸ்ரீராமகிருஷ்ண மடம், ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் ஆகியவற்றின் தலைவர் ஸ்ரீமத் சுவாமி வீரேச்வரானந்தஜி மகராஜ் அவர்கள் 1983 மே 9-ஆம் நாள் சென்னைக்கு வருகிறார் என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். அவர் சென்னை, ஸ்ரீராமகிருஷ்ண மடத்தில் மே 14-ஆம் தேதி வரை தங்கியிருப்பார்.

---

### பதிப்பாளர் கவனிக்கவும்

விஜயத்தில் புதிதாக வெளிவரும் தமிழ் நூல்களை அறிமுகம் செய்கிறோம்.

நூல் வெளியிடுவோர் இந்தப் பகுதிக்குப் புத்தகம் அனுப்ப விரும்பினால், விஜயம் பத்திரிகைக்கு ஏற்புடைய நூல்களை மட்டும் இரண்டு பிரதிகள் அனுப்பவும்.

---

# சந்தாதாரர்களுக்கு ஒரு வேண்டுகோள்

பேரன்பிற்குரிய வாசகருக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. அன்பும் வணக்கங்களும்.

1983 மார்ச் முதல் விஜயம் சந்தா விவரம் மாற்றி அமைக்கப்பட்டுள்ளது. சந்தா மாறுதல் பற்றிய அறிவிப்பை ஏப்ரல் இதழில் வெளியிட்டிருந்தோம்.

புதிய சந்தா மாறுதல் பற்றிய அறிவிப்பு வெளிவருவதற்கு முன்பே ரூ. 12 செலுத்திப் பத்திரிகையைப் பெற்று வரும் பழைய சந்தாதாரர்கள் ஏப்ரல் முதற் கொண்டு தாங்கள் பெற வேண்டிய பிரதி ஒன்றுக்கு 25 காசு என்று கணக்கிட்டு மணியார்டர் அல்லது போஸ்டல் ஆர்டர் மூலம் பணம் அனுப்பக் கோருகிறோம். உதாரணமாக, ஓர் ஆண்டுக்குச் சந்தா செலுத்தியவர் மார்ச் வரை நான்கு இதழ்களை பெற்று, அதன் பின்னர் எட்டு இதழ்களைப் பெறவேண்டியிருப்பின் ரூ. 2 கூடுதலாக அனுப்பவும்.

ரூ. 12 செலுத்திய புதிய சந்தாதாரர்கள் அனைவரும் ரூ. 3 கூடுதலாக அனுப்பி உதவ வேண்டுகிறோம்.

கடந்த இதழில் வெளிவந்த அறிவிப்பைப் பார்த்துச் சந்தாதாரர்களில் சிலர், புதிய சந்தா உயர்வுக்கேற்பப் பணம் அனுப்பி வருகிறார்கள். அவர்களின் ஒத்துழைப்புக்கு நன்றி.

இதுவரை புதிய சந்தா விகிதப்படி பணம் அனுப்பாத அன்பர்களை விரைவில் தொகையை அனுப்பி உதவக் கோருகிறோம்.

ஏற்கனவே ரூ. 100, ரூ. 125, ரூ. 150 என்று ஆயுள் சந்தா செலுத்தியவர்கள், இப்போதைய ஆயுள் சந்தா விகிதப்படி கூடுதல் தொகை அனுப்புவதை வரவேற்கிறோம்.

# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

தொகுதி 63 | மே—1983 | இதழ் 5

பொருளடக்கம்



இந்த இதழின் அட்டைப் படம்: சிதம்பரம் கோயில்

## எழுத்தாளர்களுக்கு

நமது பத்திரிகைக்கு ஏற்புடைய கதை, கட்டுரை, தகவல்கள், மகான்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகள், பொன்மொழிகள், ஆன்மிக வினா, (கவிதைகள் அனுப்ப வேண்டாம்) கோவில் போன்ற புகைப்படங்கள் முதலிய எதையும் தபால் மூலம் அனுப்ப வேண்டும். அவற்றைத் திருத்தி அமைக்கவும் சுருக்கவும் ஆசிரியருக்கு உரிமை உண்டு.

எழுத்தாளர் தமது எழுத்தோவியம் எதுவாயினும் அதன் நகல் ஒன்றைத் தம்மிடம் வைத்துக்கொண்டு பின்னர் விஜயத்திற்கு அனுப்பக் கோருகிறோம்.

மக்களுக்குப் பயன்படுவதாகவும், சுருக்கமாகவும், கருத்தாழம் கொண்டதாகவும் எழுத்தோவியம் அமைவது முற்றிலும் அவசியம். காகிதத்தின் ஒரு பக்கத்தில் மட்டும், வரிக்கு வரி நிறைய இடம்விட்டு, எளிய தமிழ் நடையில் தெளிவாக எழுத வேண்டும்.

பத்திரிகையில் வெளியிடப்படுவதாக இருந்தால், அனுப்பியவருக்கு ஒரு வார காலத்திற்குள்ளாக ஆசிரியர் சார்பாகப் பதில் கிடைத்துவிடும்.

பிரசுரிக்கத் தேர்ந்தெடுக்கப்படாத கதை, கட்டுரை முதலியவற்றைத் திரும்பப் பெற போதிய தபால் தலைகள் இணைத்திருக்க வேண்டும். தபால் தலை வைத்திராத கதை கட்டுரைகள் திருப்பி அனுப்புவதற்கில்லை என்று தெரிவித்துச் சொல்கிறோம்.

ஆசிரியர்,
ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்



# ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன் இல்லை.

—திருமூலர் —


தொகுதி 63 ருதிரோத்கா்ரி ஹு வைகாசி மீ இதழ் 5


## பிரார்த்தனை

श्रीरामचन्द्रचरणाम्बुजमत्तभृङ्ग
श्रीचन्द्रचूडवरगर्वितरावणारे ।
श्रीरामदूत करुणाकर दीनबन्धो
वातात्मजाद्य कृपया कुरु सुप्रभातम् ॥

ஸ்ரீராமசந்த்ர-சரணாம்புஜ-மத்தப்ருங்க
ஸ்ரீசந்த்ரசூட-வரகர்வித-ராவணாரே ।
ஸ்ரீராமதூத கருணாகர தீநபந்தோ
வாதாத்மஜாத்ய க்ருபயா குரு ஸுப்ரபாதம் ॥

ஸ்ரீராமனின் சரணகமலங்களில் மொய்க்கும் வண்டாக இருப்பவரே! பரமசிவனின் வரத்தினால் கர்வம் கொண்ட ராவணனின் பகைவரே! ஸ்ரீராம தூதரே! கருணை நிறைந்தவரே! தீனர்களின் உறவினரே! வாயுவின் புதல்வரான ஹனுமானே! இன்று நல்ல பொழுதாக விடிய அருள்புரியுங்கள்.

ஒலியாகி உயிராகி உருவாகித் திருவாகிக்
கலையாகி நிலையாகிக் கண்ணாகி விண்ணாகி
மலையாகி விளங்குகின்ற வனமுல்லை வைஷ்ணவியே!
அலையாத அமைதி தரும் அன்பே! நீ அருள்வாயே!



# ஸ்ரீராமகிருஷ்ணரின் அருள்வாக்கு

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (சிரித்தபடி): ஏன் இவ்வளவு கோமாளிகளை, முகஸ்துதிக் காரர்களை உன்னைச் சுற்றிலும் வைத்துக் கொண்டிருக்கிறாய்?

யது (சிரித்துக்கொண்டே): நீ கடைத் தேற்றுவாய் என்றுதான். (எல்லோரும் சிரித்தனர்.)

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** பணக்காரர்கள் பணத்தைத் தங்களுக்குத் தாராளமாகக் கொடுப்பார்கள் என்று முகஸ்துதி செய்பவர்கள் நினைக்கிறார்கள். ஆனால் பணக்காரனிடமிருந்து பணத்தைப் பெறுவது அவ்வளவு சுலபமல்ல. நரி ஒன்று, ஓர் எருதைப் பார்த்தது. பிரியாமல் எப்போதும் அந்த எருதுடன் நரி சுற்றிக் கொண்டிருந்தது. எருது புல் மேயச் சென்றால் நரியும் கூடவே செல்லும். காரணம் என்னவெனில், எருதின் இரண்டு விதைகள் தொங்குவதை நரி பார்த்தது: 'எப்பொழுதாவது இந்த விதைகள் கீழே விழும். அப்பொழுது நான் அவற்றைச் சாப்பிடுவேன்' என்று நரி ஆசைப்பட்டது. எருது தரையில் படுத்துத் தூங்கும்போது நரியும் அருகில் படுத்துத் தூங்கியது. எருது அங்கும் இங்கும் திரிந்தபொழுது நரியும் கூடவே திரிந்தது. இவ்வாறு பல நாட்கள் கழிந்தன. ஆனால் எருதின் விதைகள் மட்டும் கீழே விழவில்லை. கடைசியில் நரி ஏமாந்து போய் அங்கிருந்து ஓடி விட்டது. (எல்லோரும் சிரித்தனர்.) முகஸ்துதிக்காரர்களின் நிலையும் இப்படித்தான்.

புதன்கிழமை, டிசம்பர் 19, 1883

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (ம-விடம்): பெண், பொன் இவற்றைத் துறக்காவிட்டால், இறைவனுடைய காட்சி கிடைக்கவே கிடைக்காது.

ம-: ஏன் கிடைக்காது? வசிஷ்டர் இராமனைப் பார்த்து, ''உலகம் இறைவனிடமிருந்து தனித்து இருந்தால் அல்லவா நீ அதைத் துறக்கலாம்!'' என்று சொல்லவில்லையா?

**ஸ்ரீராமகிருஷ்ணர்** (புன்சிரிப்புடன்): இராமருக்கு இராவணனைக் கொல்ல வேண்டியிருந்தது! ஆகவே இராமர் உலக வாழ்க்கை நடத்தினார்; திருமணம் செய்துகொண்டார்.

இதைக் கேட்டதும் ம- அதிர்ச்சியும் ஆச்சரியமும் அடைந்து பேச்சற்று ஒரு கட்டையைப் போல் உணர்வற்று நின்றார்.

ம-: ஐயா, அருவக் கடவுளைக் காண்பதற்கான சாதனைகளைச் செய்யமுடியாதா?

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** ஏன் முடியாது? ஆனால் அது மிகவும் கடினமானது. முற்காலத்தில் முனிவர்கள் இதற்காக நீண்ட நாட்கள் கடுந்தவம் செய்து தங்களுடைய உண்மை நிலையை, அதாவது பிரம்மத்தின் உண்மை நிலையை உணர்ந்தார்கள். எவ்வளவு துன்பப்பட்டுச் சாதனைகளை அவர்கள் செய்ய வேண்டியிருந்தது! நாள் முழுவதும் தவம் புரிவார்கள். மாலை வேளையில் வீடு திரும்பு

ஐம்பூதங்களும் எப்படி உண்மையானவையோ அப்படி ஆத்மாவும் உண்மையானது.

—யாஜ்ஞவல்க்ய ஸ்மிருதி

வார்கள். சிறிது பழம், கிழங்கு இவைகளை மட்டுமே உணவாக உண்பார்கள்.

இத்தகைய சாதனைகளில் உலகப்பற்று ஒரு துளி இருந்தாலும் பலன் கிடைக்காது. சுவை, ஒளி, உணர்வு, ஓசை, நாற்றம் என்ற இவை பற்றிய நினைவுகள் இருத்தல் கூடாது. அப்போதுதான் மனம் தூய்மையடையும். அப்படிப்பட்ட தூய மனமும் தூய ஆத்மாவும் ஒன்றுதான். மனதில் பெண், பொன் பற்று எள்ளளவும் இருக்கக்கூடாது.

மனம் தூய்மையாக இருக்கும்போது அந்த மனதின் மூலம் இறைவனே செயல் புரிகிறான். அப்போது 'நான் அல்ல' என்ற அனுபவம் ஏற்படுகிறது. இன்பத்திலாகட்டும், துன்பத்திலாகட்டும், 'நான் இல்லாவிட்டால் எதுவும் நடக்காது' என்ற நிலை முழுவதும் மறைந்துவிடுகிறது.

ஒருவன் மடத்தில் வாழ்ந்து வந்த சாது ஒருவரை நன்றாக அடித்துவிட்டான். அவர் மயங்கி விழுந்துவிட்டார். அவருடைய நண்பர்கள் மயக்கத்தைத் தெளிய வைத்து, குடிக்கப் பால் கொடுத்தபடியே, ''இப்போது யார் பால் கொடுக்கிறார்கள்?'' என்று கேட்டார்கள். அதற்கு அவர், ''என்னை எவன் அடித்தானோ அவனே இப்போது பால் கொடுத்துக்கொண்டிருக்கிறான்'' என்றார்.

ம-: ஆம் ஐயா. அந்தக் கதை எனக்குத் தெரியும்.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** தெரிந்தால் மட்டும் போதாது. மனதில் நன்றாகப் பதிய வேண்டும். உலகப் பொருள்களைப் பற்றிய நினைவு மனதைச் சமாதி நிலை அடைய விடுவதில்லை. பொருளாசை அடியோடு அழியுமானால் நிலையான சமாதி உண்டாகிறது. என் மனம் நிலையாகச் சமாதியில் ஆழ்ந்துவிடுவதுண்டு. ஆனால், எனக்குப் பக்தியைப் பற்றிக்கொண்டு பக்தர்களோடு வாழ வேண்டும் என்ற ஆசை சிறிது இருப்பதனால் என் மனம் சிறிது உடலின் மீதும் படிந்துள்ளது. உன்மனா சமாதி என்று ஒன்று உண்டு. அதன்படி சிதறிக் கிடக்கும் மனம் திடீரென்று ஒன்றுபட்டுவிடுகிறது. இதை நீ அறிந்துகொண்டாயா?

> **வாழ்க்கை**
> தனக்காக மட்டும் வாழ்பவன் ஒருநாளும் இன்புற முடியாது. நம்மைவிடப் பெரிய காரியங்களிலும் இலட்சியங்களிலும் ஈடுபடுவதனால்தான் ஆனந்தம் உண்டாகிறது.
> —ஓர் அறிஞர்

ம-: ஆம் ஐயா.

**ஸ்ரீராமகிருஷ்ணர்:** சிதறிய மனதைத் திடீரென்று திரட்டி ஒன்றாக்குவது இது. ஆனால் அதிக நேரம் இந்தச் சமாதி நிலையில் இருக்க முடிவதில்லை. உலக விஷயங்களைப் பற்றிய எண்ணம் மனதில் தோன்றிச் சமாதியைக் கலைத்துவிடுகிறது. யோகிகள் தாங்கள் செய்து கொண்டிருக்கும் யோகத்திலிருந்து நழுவி விழுந்துவிடுகிறார்கள்.

சுவர்ச் சந்தில் கீரிப் பிள்ளைகள் வசிப்பதைக் கமார்ப்புகூரில் நான் பார்த்திருக்கிறேன். சந்தில் இருக்கும்போது அவை சுகமாக இருக்கும். குறும்புக்காரச் சிறுவர்கள் கீரிப் பிள்ளையின் வாலில் ஒரு செங்கல்லைக் கட்டித் தொங்க விட்டுவிடுவார்கள். செங்கல்லின் கனத்தால் அது சந்திலிருந்து வெளியே வரவேண்டியிருக்கும். சுவர்ச் சந்தில் சுகமாக இருப்போம் என்று எவ்வளவு முறை அது விழாமல் இருக்க முயற்சி செய்யுமோ அவ்வளவு முறையும் செங்கல்லின் பாரத்தால் கீழே இழுக்கப்பட்டு வெளியே வந்துவிடும். உலக விஷயங்களைப் பற்றிய எண்ணங்களும் இப்படித்தான். அவை யோகிகளைத் தங்கள் இலட்சியத்திலிருந்து நழுவிக் கீழே விழச் செய்கின்றன.

உலகப் பற்றுடைய மக்கள்கூடச் சில சமயம் சமாதியை அடையலாம். சூரியன் தோன்றியதும் தாமரை மலர்கிறது. மேகம் சூரியனை மறைத்துக்கொண்டால் தாமரை இதழ்களை மூடிக்கொள்கிறது. விஷயப்பற்று (உலகஆசை) தான் மேகம்



# தருமம்

## திருமுருக கிருபானந்தவாரியார்

நாம் அயலூரிற் சென்று ஈட்டிய பொருளை அங்கிருந்து வரும்போது உடன் கொண்டு வராமல் அங்கேயே வைத்து விட்டு வர விரும்புவோமா? அது போல் இவ்வுலகில் தேடிய பொருளை இவ்வுடம்பு இங்கேயே வைத்துவிட்டுப் போவது அறிவுடைமையாகாது அல்லவா? பொருள் உடன் வர வேண்டுமாயின் என்ன செய்ய வேண்டும்? பொருளை வறியவர்க்கு ஈந்து தருமம் புரிந்து அருளாக மாற்றிவிட வேண்டும். அருள் அந்த உலகத்திற்கு வரும். மறுபிறப்பிலும் அருளால் நாம் இன்புறுவோம்.

'எங்காயினும் வரும் ஏற்பவர்க் கிட்டது' என்கிறார் அருணகிரிநாதர். இங்கு நாம் ஏற்பவர்க்கு இடுவோமானால் மாண்டு எந்த உலகத்திற்குச் சென்றாலும், மீண்டு எந்தத் தேயத்திற் பிறந்தாலும் அங்கு இந்தப் புண்ணியத்தின் பயன் வரும்.

வறியவர்கட்கு வழங்கி அவர்கள் இன்புறுவதைக் கண்டு நாம் இன்புற வேண்டும். 'ஈத்துவக்கும் இன்பம்' என்பார் திருவள்ளுவர். அங்ஙனம் ஈந்தவரே வாழ்ந்தவர்; ஈயாதார் மாய்ந்தவரே ஆவார். 'ஈயா மனிதரை ஏன் படைத்தாய் கச்சியேகம்பனே' என்று இறைவனையே கேட்கிறார் திருவெண்காடர். இரப்பவர்க்கு ஈயாமல் கரப்பவர் கட்காகவே கடுநரகங்களை இறைவன் உண்டாக்கினானாம்.

கரப்பவர் தங்கட்கெல்லாம் கடுநர
கங்கள் வைத்தார்—அப்பர்.

காசுதேடி ஈயாமல் வாழப் பெறுவோரும்
மாறிலாத மாகால னூர்ப்புக்
கலைவாரே—அருணகிரிநாதர்.

ஈயார்க்கு இம்மையில் இகழும், மறுமையில் பாவமும் எய்தும்; 'ஈபவர்க் கருளும் வைத்தார்' என்றதனால், தருமம் செய்வோர் இம்மையில் புகழும் மறுமையில் புண்ணியமும் எய்துவர்.

வறியார்க்கு இரக்கமுடன் ஈந்தால் அது மீண்டும் ஒன்றுக்கு நூறாக நம்பால் வருகின்றது. வாணிபத்திலும் விவசாயத்திலும் பெரும் பலன் வரும். 'விருந்தோம்புவோனிடம் அகனமர்ந்து செய்யாளுறைவள்' என்று வள்ளுவர் வகுத்துரைத்தார். 'வறியார்க்கு ஈந்தால் அது எப்படி வாணிபத்தில்—விவசாயத்தில் வரும்? இங்குத் தந்தது அங்கு எப்படி வரும்?' என்ற ஐயம் ஏற்படலாம். பசுவுக்கு அகத்திக் கீரை, பிண்ணாக்கு, பருத்திக்கொட்டை, பசும்புல் இவற்றை வாயிலே தருகின்றோம்; மடியிலே, படிக்கணக்காகப் பால் பெறுகின்றோம். தந்தது வாயில், பெற்றது மடியில். அது போல் வறியவர்க்குப் பயன் கருதாமல் சிவார்ப்பணமாகச் செய்தது ஒன்று கோடியாகப் பெருகி வரும் என்று உணர்க.



ஓர் அவரை விதையை மண்ணில் போடுகின்றோம்; ஆயிரக் கணக்கான அவரைக்காயைப் பெறுகின்றோம். தென்னைக்குத் தண்ணீரை விட்டு இளநீரைப் பெறுகின்றோம். இவை கண்கூடு.

காரைக்காலம்மையார் வந்த அடியார்க்கு மதுரக்கனி ஒன்று தந்து இறைவனிடம் அதிமதுரக்கனி இரண்டு பெற்றார்.

பாண்டவர் வாழும் இந்திரப்பிரஸ்தத்திற்கு ஒரு சமயம் கண்ணபிரான் வந்திருந்தார். அரண்மனையிலுள்ள தாமரைத் தடாகத்தில் பாண்டவர்களும் கண்ணபிரானும் நீராடி நீந்தி விளையாடினார்கள். திரௌபதி, ருக்மிணி, சத்தியபாமை, சுபத்திரை முதலியோர் கரையில் நின்று வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தனர்.

உச்சிநேரத்தில் எல்லோரும் கரையேறினார்கள். எல்லோரையும் பிறவிக் கடலினின்றும் கரையேற்றுகின்ற கண்ணன் மட்டும் கரையேறவில்லை. கழுத்தளவு தண்ணீரிலேயே முழுகியிருந்தார். தருமர், ''கண்ணா! உணவு நேரம் வந்துவிட்டது; பெண்கள் காத்துக் கொண்டுள்ளார்கள். கரையேறு'' என்றார். அவர் கரையேறவில்லை.

பீமன் முதலியோரும் வேண்டினார்கள். அவர் அசைவற்று இருந்தார். காரணம் ஒருவருக்கும் விளங்கவில்லை. திரௌபதியின் நுண்ணிய அறிவில் காரணம் விளங்கியது. பளீர் என்று தன் புடைவையின் முன்றானையில் சாணளவு கிழித்துச் சுருட்டிக் கண்ணபிரானிடம் வீசி எறிந்தாள்.

கண்ணபிரானுக்குக் கௌபீனம் தவறியது. பெண்கள் கரையில் இருந்ததனால் சொல்லவோ வெளிப்படவோ இயலாமல் தவித்தார். ஏன்? முன்பு சில பெண்களைத் தண்ணீரில் ஆடையின்றி அல்லற்பட விடுத்தார். முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும். அதனால் அவர் இப்போது ஆடையின்றி அல்லற்பட்டார். அந்தக் குறிப்பறிந்து திரௌபதி சாண் புடைவை கொடுத்து உதவினாள்; அதனை உடுத்துப் பகவான் கரையேறினார்.

திரௌபதி தொழுதாள். ''அம்மா! இன்று சாண்புடைவை தந்து என் மானம் காப்பாற்றினாய்; சமயம் வந்தால் உனக்குக் கோடிப் புடைவை தந்து மானம் காப்பாற்றுவேன்'' என்று அருள்



புரிந்தார். அதுபடியே திரௌபதிக்கு மானசம்ரக்ஷணம் புரிந்தார். ஆகவே நாம் செய்த தருமம் ஒன்றுக்கு ஆயிரமாகவும் லட்சமாகவும் கோடியாகவும், செய்த பாத்திரத்திற்குத் தக்கபடி நம்பால் வரும்.

எந்தக் காரியத்தை அறிவினால் சாதிக்க முடியுமோ, அதே காரியத்திற்குப் பலத்தைப் பிரயோகித்தால் பயன் தராது.

அமைதியாக, புத்தியைக் கொண்டு சாதிக்கக் கூடிய காரியத்தில், மிகவும் கஷ்டப்பட்டு வலிமையைப் பிரயோகிக்கும் மனிதனை என்னவென்று சொல்வது?

—ஜைமினி முனிவர்

# விவேகானந்தரின் வாழ்க்கையிலே...

வங்காளத்தில் புகழ்பெற்ற நாடக ஆசிரியராக விளங்கிய கிரீஷ் சந்திர கோஷ், ஸ்ரீராமகிருஷ்ணரின் சீடர்களுள் ஒருவர்.

விவேகானந்தரும் கிரீஷ்சந்திரரும் ஒருவர்மீது ஒருவர் பெரிதும் அன்பு கொண்டவர்கள்.

ஒரு சமயம் சுவாமி விவேகானந்தர் தமது சீடர்களுக்கு வேதாந்தம், ரிக்வேதம், உலகத்தின் தோற்றம் போன்ற நுட்பமான கருத்துக்களை விளக்கிப் பாடம் நடத்திக்கொண்டிருந்தார்.

வேதாந்தப் பாடம் நடைபெறும் இடத்திற்குத் தற்செயலாக கிரீஷ் சந்திர கோஷ் வந்தார்.

விவேகானந்தரும் கிரீஷ்சந்திர கோஷும் ஒருவரை ஒருவர் நலன் விசாரித்துக்கொண்டனர்.

உயர்ந்த நுட்பமான வேதாந்த ஆராய்ச்சியில் ஈடுபட்டிருந்த விவேகானந்தரை கிரீஷ் சந்திர கோஷ் இடைமறித்து, ''நான் சொல்வதைக் கொஞ்சம் கேளுங்கள். நீங்கள் எவ்வளவோ வேத வேதாந்தங்களை எல்லாம் படித்திருக்கிறீர்கள். அவற்றில் இந்த நாட்டிலுள்ள கொடிய துன்பங்களுக்கும், ஓலங்களுக்கும், பட்டினிக்கும், விபசாரம் முதலிய கொடும் பாவங்களுக்கும் தப்பி நாங்கள் வெளியேறுவதற்கு உரிய ஒரு வழி எங்கேயாவது சொல்லப் பட்டிருக்கிறதா?'' என்று கேட்டார்.

இவ்விதம் கேட்டதோடன்றி கிரீஷ், மேலும் சமுதாயத்தில் இருந்து வரும் பெரும் துன்பங்களையெல்லாம் சுவாமிஜியிடம் விளக்கமாகக் கூறினார்.

மக்களின் துன்பங்களையும் கவலைகளையும் கேட்டதுதான் தாமதம், சுவாமிஜியின் கண்களில் நீர் மல்கியது. அவர் பேச்சற்று மௌனமானார். தாம் அழுவதைப் பிறருக்கு மறைப்பவர் போல அவர் அந்த இடத்தை விட்டு அகன்றார்.

அப்போது கிரீஷ், விவேகானந்தரின் சீடரை நோக்கி, ''சுவாமிஜிக்கு எத்தகைய அன்பு நிறைந்த உள்ளம், பார்த்தாயா? உன்னுடைய சுவாமிஜி வேதங்களையெல்லாம் நன்றாகப் படித்தவர் என்ற காரணத்தினால் நான் அவரை மதிக்கவில்லை. மக்களின் துன்பத்தைக் கேட்ட மாத்திரத்தில் கண்ணீர் பெருக அழுதுகொண்டு





போனரே, அந்த உயர்ந்த உள்ளத்திற்காகத்தான் நான் அவரை மதிக்கிறேன்'' என்று கூறினர்.

சிறிது நேரம் கழிந்தது. கிரீஷும் சீடரும் இருந்த இடத்துக்கு சுவாமிஜி மீண்டும் வந்தார். அதே சமயம் சுவாமி சதானந்தரும் தற்செயலாக அங்கே வந்தார்.

**சுவாமிஜி (சதானந்தரிடம்):** நமது நாட்டு மக்களின் துன்பங்களை கிரீஷ் எனக்கு விளக்கமாக எடுத்துக் கூறினர். அதைக் கேட்டு என் இதயம் மிகவும் வேதனைப்படுகிறது. இந்தத் துன்பங்களைப் போக்க நீ ஏதாவது செய்ய முடியுமா?

**சுவாமி சதானந்தர்:** தேவரீருடைய கட்டளை பிறக்கட்டும்; அடிமை எப்போதும் தங்கள் கட்டளையை நிறைவேற்றத் தயாராக இருக்கிறேன்.

**சுவாமிஜி:** ஏழைகளுக்கும் துன்பத்தில் வாடுபவர்களுக்கும் ஆறுதல் அளிப்பதற்கும், நோயாளிகளைக் கவனித்துக்கொள்ளவும் முதலில் சிறிய அளவில் ஒரு நிலையத்தைத் தொடங்குவோம். அந்த இடத்தில் சாதி மத வேறுபாடு இல்லாமல் எல்லோருக்கும் உதவி செய்வோம்.

**சதானந்தர்:** தங்கள் கட்டளை செயற்படுத்தப்படும்.

**சுவாமிஜி (சதானந்தரிடம்):** மக்களுக்குத் தொண்டு செய்வதைவிடப் பெரிய ஓர் அறம் இல்லை. இந்தத் தர்மத்தைப் பின்பற்றினல் ஒருவனுக்கு உள்ளங்கை நெல்லிக்கனி போல முக்தி வந்துசேரும்.

**சுவாமிஜி (கிரீஷிடம்):** உலகத்தின் துன்பங்களை நீக்கும்பொருட்டு ஆயிரம் பிறவி எடுக்க வேண்டியிருப்பினும் எடுப்பேன் என்ற எண்ணம் என் மனதில் உண்டாகிறது. நான் அவ்விதம் செய்வதனல் ஒரே ஒரு மனிதனுகிலும் துன்பத்திலிருந்து சிறிதளவாகிலும் விடுதலை பெறுவானுனல் நான் நிச்சயம் அப்படிச் செய்யத் தயாராக இருக்கிறேன். தனித்து முக்தி அடைவதனல் பயன் என்ன? முக்தி வழியில் எல்லா மக்களையும் நாம் கொண்டு செல்ல வேண்டும்.

விவேகானந்தரின் 'மக்கள் தொண்டே மகேசன் தொண்டு' என்ற கருத்து, 'அன்பர் பணிசெய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்ப நிலை தானே வந்தெய்தும் பராபரமே' என்ற தாயுமானவரின் வாக்கை நினைவுபடுத்துகிறது.



# யார் காண?

கி. வா. ஜகந்நாதன்

இறைவன் மயானத்தில் நடனமாடும் கோலத்தை மீண்டும் எண்ணுகிருர் அம்மையார். பேயோடு பேயாக நின்று கண்ட காட்சி அவர் உள்ளத்தில் அழுந்தப் பதிந்திருக்கிறது. மறுபடியும் வினவை எழுப்புகிருர்.

இறைவன் நாகத்தைப் பூணுக அணிந்திருக்கிருன். அந்த நாகத்துக்கு ஐந்து தலைகள் இருக்கின்றன. அவன் ஆடும் போது அந்த நாகம் வாயைத் திறந்து அனலைக் கக்குகிறது. கீழேயும் தீ, சுற்றிலும் மயானத் தீ, பாம்பு உமிழ்வதும் தீ. எல்லாம் அனல்மயம். அங்கே தீப்பிழம்பாக நின்று நடனமாடுகிருன் இறைவன்.

இந்தப் பயங்கரமான சூழ்நிலையில் ஆடுகிருனே, அந்த நடனத்தைக் கண்டு களிப்பவர் யார்? இறைவனை விளித்து வினவுகிருர் அம்மையார்.

**அங்காந்து அனல்உமிழும் ஐவாய நாகத்தாய் !**

''நீ ஆடுகின்ற நடனத்தை அங்கே வந்து யார் காணப்போகிருர்கள்? யார் கண்டு களிப்பதற்காக நீ தீ உண்டாகி எரியும் சுடுகாட்டில் ஆடுகிருய்?'' என்ற கேள்வி அம்மையார் உள்ளத்தில் எழுகிறது.

அந்த இடத்தில் யார் இருக்கிருர்கள்? அவனேடு இணைந்து என்றும் பிரியாமல் இருக்கிருள் அன்னை. அவள் நல்ல பருவ மடந்தையாகக் காட்சி அளிக்கிருள். தங்கச் செப்புப் போன்று இளமையின் வளப்பத்தைக் காட்டும் நகில்களை உடையவள் அவள். அந்தப் பெருமாட்டிதான் அதைக் கண்டு களிக்கிருளோ? அவள் தன் நடனத்தைக் காண வேண்டும் என்றுதானே இந்த நடனத்தை ஆடுகிருன்?

**செப்பு ஏந்து இளமுலையாள் காணவோ ?**

அல்லது அந்த மயானத்தையே தம்முடைய வாசத்தானமாகக் கொண்ட பேய்க் கூட்டம் கண்டு களிக்கவே அவ்வாறு ஆடுகிருனே?

இறைவன் ஆடும் மன்றங்கள் பல உள்ளன. இரத்தின சபை, கனக சபை, வெள்ளியம்பலம், தாமிர சபை, சித்திர சபை என்ற ஐந்து சபைகள் வெவ்வேறு தலங்களில் இருக்கின்றன. அந்த இடங்களில் ஆடும் நடனத்தைக் காணப் பேய்கள் வருவதில்லை. பக்தர்கள் கண்டு களிக்க ஆடும் அந்தத் தலங்களில் பேய்களுக்கு என்ன வேலை? உயிரோடு உலவும் மனிதர்கள் வாழும் இடத்தில் பேய்க்கு உணவில்லை; உற்சாகம் இல்லை. பிணம் சுடும் மயானத்தில்தான் அவை வாழ்கின்றன. அங்கேதான் அவற்றிற்கு உணவு கிடைக்கிறது.

அந்தப் பேய்களும் தன் நடனக் காட்சியைக் கண்டு களிக்க வேண்டும் என்ற பெருங் கருணையால், அவற்றிற்காகவே சிறப்பாக இந்த நடனத்தை ஆடுகிருனே?

**தீப்படுகாட்டு**
**அப் பேய்க் கணமவைதாம் காணவோ ?**

இந்தக் காரணங்களில் ஏதேனும் ஒன்று உண்மையாக இருக்க வேண்டும். 'மக்கள் வாழும் தலங்களில் மட்டும்

நான் ஆடுபவஞ? என்னை விரும்பும் பேய்கள் உள்ள இடத்தில்கூட நான் ஆடுவேன்' என்று காட்டுகிருனே? 'பாவம்! அந்தப் பேய்க் கணங்களுக்கு என்னுடைய நடனத்தைக் காண வேறு வாய்ப்பு இல்லை. ஆகவே அவை உலாவும் இடத்திலே அவை கண்டு களிக்க நான் ஆடிக் காட்டுகிறேன்' என்று திருவுள்ளங் கொண்டு ஆடுகிருனே?

எந்தக் காரணத்தைச் சொல்வது? அவன் திருவுள்ளம் எது என்று அவனையே கேட்டு அறிந்துகொள்ளலாமே! 'இந்த இரண்டு காரணங்களில் ஒன்றுதான் உண்மையாக இருக்க முடியும். அந்தக்



காரணம் என்ன? எனக்கு அந்த ஒன்று இன்னதென்று சொல்' என்கிருர் அம்மையார்.

செப்பு, எனக்கு ஒன்
ருகத்தான்.

'நமக்கு இந்த இரண்டு காரணங்களும் தோன்றுகின்றன. ஆனல் அவன் எதற்காக, எந்த ஒரு காரணத்துக்காக, இந்த நடனத்தை ஆடுகிருன்? அவனே சொன்னல்தான் நமக்கு விளங்கும்' என்று எண்ணிக் கேட்கிருர் அம்மையார்.

**செப்பு ஏந்து இளமுலையாள் காணவோ?**
**தீப்படுகாட்டு**
**அப்பேய்க் கணம்அவைதாம் காணவோ?**
**செப்பு எனக்கு ஒன்**
**ருகத்தான், அங்காந்து அனல் உமிழும் ஐவாய**
**நாகத்தாய், ஆடுஉன் நடம்.**

வாயைத் திறந்து அனலைக் கக்கும் ஐந்து வாய்களையுடைய நாகத்தை அணிந்த எம்பெருமானே, நீ ஆடுகின்ற உன் நடனமானது, தங்கச் செப்பின் தன்மையை ஏந்திய, இளமையின் அடையாளமாகிய தனங்களையுடைய அன்னை கண்டு களிக்கவோ? அல்லது, தீ உண்டாகும் சுடுகாட்டில் உள்ள அந்தப் பேய்க் கணங்கள் கண்டு மகிழவோ? இந்த இரண்டில் இன்னதுதான் காரணம் என்று ஒன்ருக எனக்குச் சொல்.

[செப்பு-தங்கச்செப்பு; தந்தச்செப்பும் ஆம். ஏந்து: உவம வாசகமாகவும் கொள்ளலாம். எவ்வுலகங்களையும் ஈன்றும் தாழாக் கொங்கையாதலின், 'செப்பேந்திளமுலை' என்ருர். 'இங்கயற்கண் அகனுலகம் எண்ணிறந்த சராசரங்கள் ஈன்றும் தாழாக் கொங்கை' என்று அதனைச் சிறப்பிப்பார் பரஞ்சோதி முனிவர். தீப்படுகாடு-பிணத்தை எரிக்கத் தீயை உண்டாக்கிய சுடுகாடு. அப்பேய் என்ற சுட்டு அந்த மயானத்தில் வாழும் பேய்களைச் சுட்டியது. கூட்டம் கூட்டமாகப் பேய்கள் இருத்தலின் பேய்க் கணம் என்ருர். கணம் அவை: அவை, பகுதிப்பொருள் விகுதி. எனக்கு ஒன்ருகச் செப்பு. தான்: அசை. இறைவன் ஆடும்போது அந்த ஆட்டத்தின் வேகத்தால் பாம்பு வாயைத் திறந்து அனலை உமிழ்கிறது. ஆடு உன் நடம்.

நடம், காணவோ, காணவோ? எனக்கு ஒன்ருகச் செப்பு என்று முடிக்க.]

இறைவன் மயானத்தில் ஆடுகிறதைச் சொன்னபடி.

இது, அற்புதத் திருவந்தாதியில் வரும் 99-ஆவது பாட்டு.






# மகரிஷியின் விலை

·நாடோடி·

ஒரு சமயம் ஆபஸ்தம்ப மகரிஷி நதிக்குள்ளேயே இருந்து தவம் செய்வது என்று தீர்மானித்தார். ஆகவே பன்னிரண்டு வருடகாலம் நர்மதை நதிக்குள் மூழ்கித் தவம் செய்தார்.

அப்பொழுது ஒரு செம்படவன் மீன் பிடிப்பதற்காக வலையை நதியில் வீச, மீன்களோடு மீன்களாக இவரும் வலையில் அகப்பட்டுக்கொள்ள, வெளியே இழுக்கப்பட்டார்.

தன் வலையில் ஒரு மகரிஷி இருப்பதைக் கண்டதும் செம்படவன் பயந்துபோய் அவர் காலில் விழுந்து தன்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொண்டான்.

"தாங்கள் வலையை விட்டு வெளியே செல்லலாம்" என்றான் செம் படவன்.

ஆனால் ஆபஸ்தம்பர் வலையை விட்டு வெளியே வர மறுத்தார். "எப்பொழுது நீ என்னை வலைகொண்டு பிடித்துவிட்டாயோ என் மதிப்பு என்ன உண்டோ அந்தப் பொருள் உனக்குக் கொடுத்துத்தான் நான் வெளியேறுவேன்" என்று சொன்னார்.

இந்த விஷயம் அந்த ஊர் அரசன் காதுக்கு எட்டியது. அவன் உடனே முனிவரைப் பார்க்க ஓடோடி வந்தான். அரசனைக் கண்டதும் முனிவர், "என் விலை என்ன உண்டோ அதைச் செம்படவனிடம் கொடுத்து என்னை விடுதலை செய்" என்று சொன்னார்.

உடனே அரசன் செம்படவனுக்கு லட்சம் பவுன் கொடுப்பதாகச் சொன்னான்.

"என் விலை லட்சம் பவுன்தானா?" என்று கேட்டார் ஆபஸ்தம்பர்.

"சரி, கோடிப் பவுன் தருகிறேன்" என்றான் அரசன்.

"என் விலை கோடிப் பவுன்தானா?" என்று கேட்டார் ஆபஸ்தம்பர்.

"சரி, உங்களுக்கு ஈடாக என் ராஜ்யத்தையே கொடுக்கிறேன்!" என்றான் அரசன்.



“என் விலை உன் அரசுதானு?” என்று கேட்டார் ஆபஸ்தம்பர்.

அரசனுக்கு என்ன செய்வது என்று தெரியவில்லை. “தங்கள் விலையை எப்படிக் கண்டுபிடிப்பது என்று தெரியவில்லை. தாங்களே ஒரு வழி சொல்ல வேண்டும்” என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டான் அரசன்.

உடனே ஆபஸ்தம்பர், “யாராவது ரிஷிகளைக் கேட்டுப் பார். அவர்கள் சரியாகச் சொல்வார்கள், என் விலை என்னவென்று” என்று சொன்னுர்.

அந்தச் சமயம் பார்த்து லோமச முனிவர் அந்தப் பக்கம் வரவே அரசன் தன் கஷ்டத்தை எடுத்துச் சொன்னுன். லோமசர், “எதற்காக இதைப்பற்றிக் கவலைப்படுகிருய்? ஆபஸ்தம்ப முனிவருக்குப் பதிலாக நீ ஏதாவது விலை மதிக்க முடியாத பொருள்தான் செம்படவனுக்குக் கொடுக்க வேண்டும். ஆகவே ஒரு பசுவை அவருக்குப் பதிலாகக் கொடு. அதுதான் உலகில் விலை மதிக்க முடியாத பொருள்” என்ருர்.

“லோமசர் சொன்னதுதான் சரி” என்ருர் ஆபஸ்தம்பர். ●

## அரசியல் குப்பை

ஐஸன்ஹாவர் அமெரிக்க ஜனுதிபதி பதவியேற்று வெள்ளைமாளிகையில் உட்கார்ந்ததும், தாம் வேலை செய்யும் அறையில் ஒரு கண்ணுடி பீரோவில் விளக்குமாறு ஒன்றை வைத்திருந்தார்.

அவரைப் பார்க்க வரும் எல்லோரும் அந்த விளக்குமாற்றை வெகு ஆச்சரியத்துடன் பார்ப்பார்கள்; ஆனுல் அது ஏன் அங்கு வைக்கப் பட்டிருக்கிறது என்று கேட்கப் பயப்படுவார்கள். இதை ஐஸன்ஹாவர் கவனித்துக்கொண்டே இருந்தார்.

ஒரு சமயம் அவரைப் பார்க்கப் பல பிரமுகர்கள் அவருடைய காரியாலய அறையில் கூடினுர்கள். எல்லாருடைய பார்வையும் கண்ணுடி பீரோவில் இருந்த அந்த விளக்குமாற்றின் மீதுதான் சென்றது. ஆனுல் ஒருவராவது அது அங்கு எதற்காக வைக்கப்பட்டிருக்கிறது என்று கேட்கவில்லை.

இதைக் கவனித்த ஐஸன்ஹாவர், அவர்களைப் பார்த்து, “நீங்கள் எல்லாரும் அந்த விளக்குமாற்றை ஆச்சரியத்துடன் பார்க்கிறீர்களே தவிர அது அங்கு எதற்காக வைக்கப்பட்டுள்ளது என்று கேட்கவில்லை. நான் காரணத்தை விளக்குகிறேன். நான் ஜனுதிபதியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும், எனக்குப் பல விலையுயர்ந்த பரிசுகள் அனுப்பப் பட்டன. அவற்றையெல்லாம் தனியறையில் பூட்டி வைத்திருக்கிறேன். அப்படி அனுப்பப்பட்ட பரிசுகளில் இந்த விளக்குமாறும் ஒன்ருகும். இதனுடன் ஒரு கடிதம் வந்தது. ‘நீங்கள் அரசியலில் உள்ள கூளங்களைச் சுத்தம் செய்வதற்காக இதை அனுப்பி வைத்திருக்கிறேன்’ என்று அந்தக் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தது. அந்தக் காரியம் எனக்கு என்றும் நினைவிருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இதை இங்கு வைத்துள்ளேன்” என்ருர். ★

# ராமாநுஜர்



அநாதியான ஸ்ரீவைஷ்ணவம் ஸ்ரீராமாநுஜரால் மறுமலர்ச்சியுற்றது. மனித குலம் மறக்க முடியாத, மறைக்க இயலாத, மறக்கவொண்ணாத மகா புருஷர் இந்தமண்ணுலகில் தோன்றினார்.

தொள்ளாயிரத்தறுபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு பிங்கள ஆண்டில், சித்திரைத் திருவாதிரையில் அவதரித்த பகவத் ராமாநுஜரை ஸ்ரீவைஷ்ணவர் ஒருநாளும் மறந்திலர், வைதிகர் மறைத்திலர், மற்றோர் மறுத்திலர்.

மறையாய நால்வேசத்துள் நின்ற மலர்ச்சுடரை, ஆழ்வார்களின் அடியொற்றி, அனைத்துலகும் துய்க்கும் வண்ணம் ஆக்கி வைத்த உபயவேதாந்த ஆசார்ய குலதிலகர் யதிராஜர்.

ராமாநுஜரின் ஸ்ரீபாஷ்யத்தால், நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற்றது; வாட்டமிலா வண்தமிழ் மறை நூல் வாழ்ந்தது; 'பொலிக, பொலிக' என ராமாநுஜன் வரவை முன் நோக்கி நல்வாழ்த்தும் கூறியது; எம்பெருமானார் பிறப்பால், 'நலியும் நரகமும் நைந்த; நமனுக்கு இங்கு யாதொன்றுமில்லை; கலியும் கெடும்; கண்டு கொண்மின்' என்றார் நெடுநோக்குடன் நம்மாழ்வார்.

ஆழ்வான் ஆண்டான் போன்று, தம்மிலும் விஞ்சிய அறிவாற்றல் மிக்க பலரையும் தமக்குச் சிஷ்யராக்கிக் கொண்டு, அரங்கன் செல்வம் முற்றும் திருத்தி வைத்த உடையவரின் செய், நேர்த்தி கண்டு,

ஸர்வதேசதசாகாலேஷு அவ்யாஹதபராக்ரமா
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞா வர்த்ததாம்
அபிவர்த்ததாம் ll

'எக்காலத்தும், எவ்விடத்தும், எந்த நிலையிலும் தோலாத வென்றியான் ஸ்ரீராமாநுஜர் இட்ட தெய்விகக் கட்டளைகள் நாளும் வளர்க, நன்கு பொலிக!' என்று இன்றும் ஸ்ரீவைஷ்ணவக் கோயில்கள், மடங்கள், திருமாளிகைகள் தோறும் அடியார்கள் பல்லாண்டு பாடி வருகின்றனர்.

**சிந்தனைக்கு**

''உலகின் நிலையாமையை உணர்த்தி, காண்பன யாவும் பொய்த் தோற்றம்; உண்மைப் பொருள் என்று ஒன்றுமே இல்லை; கணம்தோறும் தோற்றம் காட்டி அழிவதுதான் உலகின் உண்மை'' என்கிறது புத்தரின் க்ஷணிகவாதம்.

''காண்கிற அனைத்தும் அழிபவை, மாயை, பொய். காணாத 'அந்த ஒன்று' மட்டுமே மெய், சத்தியம், நித்தியம்'' என்கிறது ஆதிசங்கரரின் அத்வைத தத்துவம்.

''இல்லாத பொருள் தோன்றுவதில்லை; தோன்றும் பொருள் இல்லாது போவதுமில்லை; அனைத்துப் பொருள்களும் உண்மையே. பொருள்களின் தோற்றங்களும் மெய்யே; அவற்றின் மாற்றங்களும் சத்தியமே; அவற்றுக்கான காரணங்களும் நித்தியமே; உடல், உயிர், இறை மூன்றும் பிரிக்க முடியாத தத்துவங்களே''—இது ஸ்ரீராமாநுஜர் கண்டு

• சே. ராமாநுஜாசாரியர் •

கொண்ட விசிஷ்டாத்வைத—சத்காரிய சத்திய—தத்துவ த்ரய தரிசனம்.

இதையே வேத உபநிஷத்துக்கள், வியாசரின் பிரம்ம சூத்திரம், பகவத் கீதை (பிரஸ்தான த்ரயம்), மற்றும் இதிகாச புராணங்கள், ஆழ்வார்களின் அருளிச்செயல்களுக்கு உரிய பொருளாக, பகவத் ராமானுஜர் எடுத்துக்காட்டி நிலை நாட்டினார்.

**ராமானுஜரின் தத்துவஞானம்**

உடலில் உயிரும், உயிரின் ஒளியான அறிவும், புறத்தே புலப்படாமல் நின்று, உடல் முழுவதையும் இயக்கி இதயத்தில் வாழ்வை மலர்விக்கிறது.

உடலுக்கு உயிர் போல, உலகுக்கு ஓர் உயிராய், அறிவின் வடிவாய், எங்கும் நிறைபொருளாய், கண்காணாத் தத்துவமாய்ப் பரவி நின்று அனைத்தையும் அனைவரையும் இயக்குகிறான் பரமன். அறிவுள்ள, அறிவற்ற அனைத்துப் பொருள்களிலும் கருதற்கு அரிய உயிருக்கு உயிராய் உறைகிறான் இறைவன்.

பரம்பொருள் உண்மையையும், என்றும் ஒழிக்க ஒழியாத அவனோடு நமக்கு உள்ள உறவையும், உள்ளது உள்ளபடி மிகத் தெளிவுற உணர்த்தியவர் ஸ்ரீராமானுஜர். நவரத்தினம் போன்ற ஒன்பது நூல்களை இயற்றி, அறிவியல் உலகை உய்வித்தவர் ராமானுஜர்.

வேதம் தமிழ் செய்த மாறன் சடகோபன் நம்மாழ்வாரின் அடிபணிந்து உய்ந்தவராகையாலே,

**திடவிசும்பு எரிவளி நீர் நிலம் இவைமிசை**
**படர்பொருள் முழுவதுமாய்,**
**அவையவை தொறும்**
**உடல்மிசை உயிர் எனக் கரந்து எங்கும்**
**பரந்துளன்**
**சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே**

என்னும் திருவாய்மொழிப் பாசுரம், உடலுக்கும் உயிருக்குமிடையிலுள்ள உறவை, உவமை காட்டி நம் உடையவருக்கு உதவியது.

'அனைத்துலகும் தன்னுள்ளே நிற்க, நெறிமையால் தானும் அவற்றுள் நிற்கும் பிரான்' என்று, நாராயணன் என்னும் மந்திரப் பொருளை, வேதம் தமிழ் செய்த மாறன் விரித்துள்ளார். அதன் சிறப்பை ஸ்ரீராமானுஜர் 'நலம் தரும் சொல்' என்ற மங்கைமன்னன் வாக்கின்படி, உலகுக்குத் தெளிவுறக் காட்டினார்.

எத்தகைய அறிஞருக்கும் எட்டாத தத்துவஞானத்தை, இறைவனால் மயர்வற மதிநலம் அருளப்பெற்ற நம்மாழ்வாரின் அருளிச்செயலில் கண்டு தெளிந்து, விருப்புடைய சாமானிய அறிவினருக்கும் கிட்டும்படி செய்திட்டார் எம்பெருமானார்.

இழந்துவிட்ட இதய உணர்வுகளை இந்தியருக்கு மீட்டுத் தந்து, வறட்டு வேதாந்தங்களை இம்மையில் வனப்பு மிக்க வாழ்க்கை நெறிகளாக்கி, வாழ்வாங்கு வாழ வழி வகுத்ததோடு, மறுமையில் இறைவனோடு பரம ஸாம்யத்தை (சமத்தன்மை—எண்குணத்தானாகும் தன்மையை) நன்கு வலியுறுத்தினார் காரேய்கருணை இராமானுசர்.

அதாவது அநாதியான வேத ஆதாரங்களிலிருந்தே பெறப்படுகிற, அரிய வேதாந்த விழுப்பொருளை, அதன் முழு வடிவில், ஸ்மிருதிகளோடு, இதிகாச புராணங்களின் இறுதிக் கருத்தாயும், ஆழ்வார்களின் திவ்யப் பிரபந்தப் பொருளாயும் எடுத்துக்கூறி, வைதிக நெறியிலும் வைணவ மரபிலும், இக வாழ்க்கையில் இறையின்பத்தையும் நிறையின்பமாகப் பொருத்தமுற இணைத்து, வையகத்தே வைகுந்தப் பெருவாழ்வு வாழ்ந்து காட்டியவர், அனைத்துலகும் வாழ, பெரும்பூதூர் வந்த வள்ளல் நம் இராமானுசர்.

**இன்றைய கொள்கைகளை அன்றே நிறைவேற்றினார்**



இனிய ஆத்மகுணங்களின் அரிய சித்திரங்கள் அண்ணல் இராமாநுசரின் உயரிய சரித்திர நிகழ்ச்சிகளாக மாறி விட்டன. நூற்றிருபது ஆண்டு நிறை வாழ்வு வாழ்ந்த பெருமகனாரின் வரலாற்றில், பிற்காலத்திய காந்தி யடிகளின் ஹரிஜன இயக்கத்துக்கு முன்னோடியாகத் தீண்டாதாரைத் திருக் குலத்தாராக்கிய செய்தி உண்டு; தொண் டனூர் ஏரியைப் பொறிஇயல் நுணுக் கம் வெளிப்பட அமைத்த அறிவியல் சமுதாயப் பணி செய்த தகவல் உண்டு. சாதி இன மொழி வேற்றுமை கடந்த பாரத ஒருமைப்பாட்டையும், பக்தி இயக்கத்தையும் 'ஊர் ஒற்றுமை கோயி லாலே' என வழிகண்டு, வேலை வாய்ப்பு, மருத்துவ வசதி உட்பட உடலுக்கும் உயிருக்கும் அதாவது இம்மைக்கும் மறுமைக்குமான எல்லாவற்றையும் கோயிலோடு இணைத்து, கலைச் சிறப்பும், கருணைப் பெருக்கும், தத்துவஞானத் தெளிவும் உயிர்க் குலத்திடையே அன்பும் பிணைப்பும் ஏற்பட வழி செய்துள்ளார் எம்பெருமானார். ●



# செய்திகள்

★ ஏப்ரல் 3-ஆம் நாள் மாலை 4 மணிக்கு வேலூர், ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றத்தின் சார்பாக ஸ்ரீராமகிருஷ்ண ஜயந்தியும், ஸ்ரீராமகிருஷ்ண வித்யால யாவின் ஆண்டுவிழாவும் விமரிசையாகக் கொண்டாடப்பெற்றன.

சுவாமி அவ்யயானந்தர், மகாநாரா யணசுவாமி, ஏ. ரத்தினம் ஆகியோர் உரை நிகழ்த்தினர்.

வேலூர்; ஸ்ரீராமகிருஷ்ண-விவேகா னந்த மன்றம் ஆர்ப்பாட்டமின்றி அமைதியாகச் செய்து வரும் பணிகள் பாராட்டுதலுக்கு உரியன.

★ திருவண்ணாமலை, ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றம் கடந்த இரண்டு ஆண்டுகளாக ஸ்ரீராமகிருஷ்ண வித்யால யாவை நடத்தி வருகிறது.

ஏப்ரல் 5-ஆம் நாள் மாலை 6-30 மணிக்கு ஸ்ரீராமகிருஷ்ண வித்யாலயா வின் இரண்டாம் ஆண்டுவிழா சிறப்பாக நடைபெற்றது.

ஆர்க்காடு, ஸ்ரீராமகிருஷ்ண-விவேகா னந்த மன்றத்தின் செயலாளர் ஏ. சுப்பிர மணியம் விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றினார்.

சுவாமி கருணானந்தர் வித்யாலயா குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்புரை நிகழ்த்தினார்.

திருவண்ணாமலையில் ஸ்ரீராமகிருஷ்ண-விவேகானந்த மன்றத்தின் பணிகள் மேன்மேலும் சிறந்து விளங்க இறை யருளைப் பிரார்த்திக்கிறோம்.

ஃ கல்கத்தா, ராமகிருஷ்ண மிஷன் இன்ஸ்டிட்யூட் ஆப் கல்சர் சார்பாகத் திறந்தவெளிக் கலையரங்கில் ஸ்ரீராம கிருஷ்ண-விவேகானந்த இளைஞர் மாநாடு இரண்டு நாள் நடைபெற்றது. காலையிலும் மாலையிலும் நடைபெற்ற இந்த மாநாட்டில் 5000 பேர் கலந்து கொண்டனர்.

ஃ கிராம முன்னேற்றத்திற்காக ஸ்ரீராம கிருஷ்ண மிஷன் சார்பாக இயங்கிவரும்

'ராமகிருஷ்ண-விவேகானந்த யுவ ஸம் மேளன்' என்ற அமைப்பு பாலி-திவான் கஞ்ச் பகுதிகளில் கடந்த மாதம் ஐந்து நாள் பணி புரிந்தது. சமுதாயப் பணி, ஆன்மிகப் பணி ஆகியவற்றுக்காக ஏற் படுத்தப்பட்டுள்ள இந்த அமைப்பின் சார்பாக 799 தொண்டர்கள் பாலி-திவான்கஞ்ச் பகுதிகளில் தொண்டு புரிந்தனர்.



அருள் நெறிக் கதை

# வெற்றி யாருக்கு

ஆதிசங்கரர் வாழ்ந்த காலத்தில் அமரசிம்மன் என்ற சமண அறிஞர் வாழ்ந்தார். இவர் பல காவியங்களை இயற்றியவர்; சிறந்த அறிஞர். இந்து மதத்தின் கோட்பாடுகளைக் கண்டிப் பதையே இவர் தம் தொழிலாகக் கொண்டிருந்தார். அதற்காக இவர் பல நூல்களும் எழுதினர்.

உருவ வழிபாட்டில் நம்பிக்கை கொண்டது இந்து மதம். ஆனல் சமண மதமோ உருவ வழிபாட்டில் நம்பிக்கை இல்லாதது.

அமரசிம்மன் இந்துமதத்தைக் கண் டித்து வாதங்கள் செய்தாலும், நூல்கள் எழுதினலும், தம் அறிவுத் திறமையை வளர்த்துக்கொள்வதற்காக, இந்துமதக் கடவுளான சரஸ்வதி தேவியை நம்பி யவர். சரஸ்வதி தேவியை இவர் மிக்க பக்தியுடன் வழிபடவே, சரஸ்வதியும் இவருடைய பக்திக்குக் கட்டுப்பட்டு, இவர் வாதங்களில் வெல்லவும், நூல்களை எழுதவும் பெரிதும் அருள்புரிந்தாள்.

சமணர்களுடன் வாதாடி, அவர்களை வாதத்தில் வென்று, இந்துமதத்தின் கோட்பாடுகளை நிலைநாட்டுவதை ஆதி சங்கரர் தம் பணியாகக் கொண்டிருந் தார். ஆதலால் அவர் ஒரு நாள் அமர சிம்மனை வாதத்திற்கு அழைத்தார்.

''வருகிறேன், ஆனல் ஒரு நிபந்தனை'' என்முர் அமரசிம்மன்.

''என்ன நிபந்தனை?'' என்று கேட்டார் சங்கரர்.

''வாதாடும்போது நம் இருவருக்கு மிடையில் ஒரு திரை இருக்க வேண்டும்.''

''இருக்கட்டுமே!'' என்முர் சங்கரர்.

தங்கள் இருவருக்குமிடையே ஒரு திரை இருக்க வேண்டும் என்று அமரசிம்மன் கேட்டதற்கு ஒரு முக்கிய காரணம் இருந்தது. ஆனல் அது என்ன காரணம் என்பது சங்கரருக்குத் தெரியாது.

விவாதத்தில் ஆதிசங்கரருக்கு உள்ள திறமையைப்பற்றி அமரசிம்மன் நன்கு அறிந்தவர். கலைமகளின் திருவருள் இல்லாமல் சங்கரரை வாதத்தில் வெல்ல முடியாது என்பது அமரசிம்மனுக்குத் தெரியும்.

எனவே, சரஸ்வதியின் பக்தராகிய அவர், ஒரு குடத்தில் சரஸ்வதியை ஆவாகனம் செய்து, சங்கரரின் கேள்வி களுக்குச் சரஸ்வதியே பதில் சொல் வதற்கு ஏற்பாடு செய்தார். ஆனல், சரஸ்வதி ஆவாகனம் செய்யப்பட்ட



குடம் தமது பக்கத்தில் இருப்பது சங்கரருக்குத் தெரியக்கூடாது என்பதற்காகத்தான் அவர் இருவருக்குமிடையில் ஒரு திரை தொங்க வேண்டும் என்ற நிபந்தனை விதித்தார்.

விவாதம் ஆரம்பித்தது. சங்கரர் பல கடினமான கேள்விகளை அமரசிம்மனிடம் கேட்டார். ஆனால் எல்லா விதமான கேள்விகளுக்கும் அமரசிம்மன் மிகவும் சர்வசாதாரணமாக டக் டக்கென்று பதில் அளித்தார். இதைக் கண்ட சங்கரருக்குத் திகைப்பு ஏற்பட்டது.

தம்முடைய கடினமான கேள்விகளுக்கு இத்தனை எளிதில் பதில் அளிப்பது ஒரு மனிதனால் ஆகக்கூடிய காரியமன்று; இதில் ஏதோ தெய்வசக்தி இருக்க வேண்டும் என்று சங்கரரின் உள்ளத்தில்பட்டது. எனவே அவர் தமது ஞானதிருஷ்டியைக் கொண்டு பார்த்தார். குடத்தில் ஆவாகனம் செய்யப்பட்ட சரஸ்வதிதான் பதில் அளிக்கிறாள் என்று தெரிந்ததும், சரஸ்வதியை மனதில் தியானித்து, ''அம்மா! இந்துதெய்வமாகிய நீ இந்து மதத்தின் எதிரிக்கு உதவிபுரிந்து இந்து மதம் நசிந்துபோவதற்கு இடம் கொடுக்கலாமா?'' என்று கேட்டார்.

உடனே திரை கிழிந்தது; சரஸ்வதி அந்தர்த்தானம் ஆனாள்; அமரசிம்மனால் அதன் பிறகு சங்கரரின் கேள்விகளுக்குப் பதில் சொல்ல முடியவில்லை.

அமரசிம்மனுக்கு அவமானம் தாங்கவில்லை. உடனே அந்தக் காலத்திய சமணமத வழக்கப்படி தீக்குளித்து உயிரை விடத் தயாரானார்.

அமரசிம்மன் தீயை மூட்டித் தாம் அதுவரையில் எழுதியிருந்த சமண நூல்களையெல்லாம் தீயில் போட்டார். கடைசியாக அவர் இயற்றிய அமரகோசம் என்ற நூலுடன் தீயில் குதிக்கத் தயாரானார். இதற்குள் அமரசிம்மன் மேற்கொண்ட முடிவு சங்கரருக்குத் தெரிய வந்தது. அவர் அமரசிம்மன் தீக்குளிக்க இருந்த இடத்திற்கு விரைந்து சென்றார்.

அமரசிம்மன் தீக் குளிப்பதற்குச் சங்கரர் விடவில்லை. அமரசிம்மனைத் தடுத்து நிறுத்தி, சங்கரர் அவருக்கு ஞானோபதேசம் அளித்து, அமரகோசம் என்ற அந்தப் புகழ் பெற்ற நூலையும் அமரசிம்மனையும் காப்பாற்றினார்.

இப்பொழுது சொல்லுங்கள், வெற்றி யாருக்கு? சங்கரருக்கா, அமரசிம்மனுக்கா?

அமரசிம்மன் இயற்றிய அமரகோசம் என்ற நூல் இப்போதும் அவரது புகழுக்குச் சான்றாக விளங்குகிறது. ★

## அன்பு

ஒரு தள்ளாத கிழவரைப் பார்த்து அவருடைய பேரன், ''தாத்தா! உங்களுக்குக் கடவுள்மீது அன்பு உண்டா?'' என்று கேட்டான்.



அதற்கு அந்தத் தள்ளாத கிழவர், ''எனக்கு அவர்மீது அன்பு இருக்கிறதோ, இல்லையோ, அவர் என்மீது அன்பாக இருக்கிறார் என்பது நிச்சயமாகத் தெரிகிறது'' என்றார்.




சுவாமி கமலாத்மானந்தர்

**கேள்வி: என் இஷ்டதெய்வம் முருகன். முருகனை இடைவிடாமல் உபாசிப்பதற்கு முருகா என்ற நாமத்தை மட்டும் உச்சரித்தல் நலமா? அல்லது வேறு எந்த நாமத்தை ஜபிக்க வேண்டும்?**

**பதில்:** 'முருகா' என்ற நாமத்தை உச்சரித்தால் போதும். ஆனல் 'சரவண பவ' என்னும் ஆறெழுத்து மந்திரத்தை ஏற்கனவே உபதேசம் பெற்று ஜபம் செய்து வரும் ஒருவரிடமிருந்து கூடு மாஞல் உபதேசம் பெற்று, அவர் காட்டும் வழியில் முறைப்படி ஜபம் செய்வது சிறந்தது.

**கேள்வி: 'த்வம்' என்பதன் முழு விளக்கம் என்ன?**

**பதில்:** 'த்வம்' என்ற சொல் 'தத்-த்வம்-அஸி' என்ற ஸாமவேத மகா வாக்கியத்தில் அடங்கியுள்ளது. இங்கே 'த்வம்' என்பது ஜீவாத்மாவைக் குறிக்கிறது. 'தத்' என்பது பரமாத்மாவைக் குறிக்கும். நீ அந்தப் பரமாத்மாவாகவே இருக்கிருய் என்பது அந்த மகாவாக்கியத்தின் உபதேசம்.

**கேள்வி: கோவில்களுக்குக் கும்பாபிஷேகம் நடைபெறும்போது அங்குரார்ப்பணம் செய்வதன் உட்கருத்து யாது?**

**பதில்:** பாலிகை என்ற மண்பாத்திரத்தில் பால் கலந்த தானியங்களை மந்திரபூர்வமாகத் தெளித்து முளைக்கச் செய்வது அங்குரார்ப்பணம் ஆகும். இது இறைவன் உலகைச் சிருஷ்டிப்பதை உணர்த்துகிறது.

இவ்விதம் தெளிக்கப்பட்ட விதைகள் நல்ல முறையில் பசுமையாக முளைத்தால் கும்பாபிஷேகக் கிரியை சரியான முறையில் அமைந்துள்ளதாகவும், அது சரியாக முளைக்கவில்லை என்ருல் குறைபாடு உள்ளதாகவும் உணர்ந்து, அதற்கு ஏற்ற வகையில் பிராயச்சித்தம் செய்வார்கள். அங்குரம் இல்லாத கிரியை பயனற்றது என்பர்.

**கேள்வி: 'சைதன்ய நிலை' என்ருல் என்ன?**

**பதில்:** ஸத்-சித்-ஆனந்தம் என்ற மூன்றும் கடவுளின் லட்சணம். என்றும் இருப்பது 'ஸத்'. எல்லாவற்றையும் அறிவது 'சித்'. குறைவற்ற இன்பம் ஆனந்தம்.

கடவுளைப்போல் பரிபூரண ஞானத்தை அடைவது 'சைதன்ய நிலை'.

**கேள்வி: பிரதிமா, பிரதீகம் என்பவற்றை விளக்கவும்.**

**பதில்:** கை கால் முதலிய அவயவங்களுடன் (புகைப்படம், விக்கிரகம் போன்று) இருக்கும் படம் அல்லது வடிவம் பிரதிமா எனப்படும்.

முதல் முழுஉருவத்தை நினைவுபடுத்தும் குறி அல்லது அங்கம் 'பிரதீகம்' எனப்படும்.

பிரதிமா என்பது தமிழில் பதுமை ஆகிறது. ஒருவரைப் போல உருவம் செய்து, படத்திலோ விக்கிரகத்திலோ ஊற்றம் வைத்து வழிபடுவது பிரதிமையைப் பூஜிப்பதாகும். பிரதீகம் என்ருல் அடையாளம்; ஒருவரிடமுள்ள நமது பக்தியை ஓர் அடையாளத்தை வைத்து அதில் செலுத்துவது பிரதீக உபாஸனையாகும். உதாரணமாக, திருமாலைச் சாளக்ராம சிலையிலும், சிவபெருமானை லிங்கரூபத்திலும் வழிபடுவது பிரதீக உபாஸனை. இரண்டும் மேலெழுந்தவாரியாகப் பார்க்க ஒன்று போலத் தோற்றிலுைம், இரண்டுக்கும் உள்ள வேறுபாடு—பிரதிமை என்பது உருவம்; பிரதீகம் என்பது அடையாளம் என்பதை அறிக.

**கேள்வி:** ஸ்ரீசங்கரருக்கு முன்னால் தமிழகத்தில் வேதாந்தச் சிந்தனைகள் இருந்தது உண்டா? கைவல்யநவநீதம் போன்ற சில வேதாந்தநூல்கள் தமிழிலேயே இயற்றப்பட்டுள்ளன. இந்தத் தமிழ் வேதாந்த நூல்கள், ஆதிசங்கரர் வேதாந்த நூல்களை இயற்றியதற்கு முன்பு தோன்றியவையா? பின்பு தோன்றியவையா?

**பதில்:** ஆதிசங்கரரின் காலம் இன்னது தான் என்று திட்டவட்டமாக இன்னும் தெரியாமலே இருக்கிறது. இது பற்றி அறிஞர்கள் பலர் பல வேறுபட்ட கருத்துக்களைத் தெரிவித்துள்ளார்கள்; தெரிவித்துக்கொண்டும் இருக்கிறார்கள்.

ஆதிசங்கரர் தோன்றுவதற்கு முன்பும் இந்தியாவில் அத்வைதச் சிந்தனைகள் இருந்துள்ளன. அவற்றுக்குத் தலைசிறந்த நல்ல ஒரு வடிவம் கொடுத்தவரே சங்கரர்.

சங்கரர் தோன்றிய பிறகு அவரது கருத்துக்களை மையமாகக் கொண்டு வேதாந்திகளின் எண்ணிக்கையும் வேதாந்த நூல்களின் எண்ணிக்கையும் இந்தியா முழுவதும் பெருகின. இந்த யகத்தான ஹிந்து மறுமலர்ச்சிக்கு வித்திட்டவர் சங்கரர்.

சங்கரருக்கு முன்பும் வேதாந்தக் கருத்துக்கள் இருந்தன. மங்கிய நிலையில்



இருந்த அதைச் சுடர் விட்டுப் பிரகாசிக்கச் செய்தவர் ஸ்ரீசங்கரரே ஆவார்.

விவேகசூடாமணி, பஞ்சதசி போன்று சம்ஸ்கிருதத்திலிருந்து தமிழில் மொழி பெயர்க்கப்பட்ட வேதாந்த நூல்கள் பல உண்டு. மொழிபெயர்ப்பாக இல்லாமல் தமிழிலேயே இயற்றப் பட்ட மூல வேதாந்த நூல்களும் பல உண்டு. அவற்றுள் சில வருமாறு: சொரூபசாரம், சசிவன்ன போதம், தச்சன் பாட்டு, வண்ணான் பாட்டு, பல்லிப் பாட்டு, மெய்ஞ்ஞானத் தங்கம்,

## வரப்பெற்றோம்

**1. நாற்பது ஸம்ஸ்காரங்கள்**

கர்ப்பாதானம் முதலிய ஸம்ஸ்காரங்களின் உட்கருத்தும் விளக்கமும் அடங்கியது.

ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ வே. சோமதேவ சர்மா. பக்கம் 156—ரூ 9. பவானி புக் சென்டர், 19, ஸ்டேஷன் ரோடு, மேலமாம்பலம், சென்னை-600 033.

**2. கணேச ஸ்தோத்ர மாலா**

விநாயகர் பற்றிய கட்டுரைகள், தமிழ் மொழிபெயர்ப்புடன் கூடிய சம்ஸ்கிருதத் துதிகள் அடங்கியது. பக்கம் 68—விலை ரூ. 3

ஆர். நடராஜன், ஸ்ரீஆசார்ய கிரந்த பிரசார சமிதி, 9, விச்வநாதபுரம், தென்னூர், திருச்சி-17

**3. யக்ஷ பிரச்னம்**

யக்ஷன் வினவும் தருமபுத்திரர் விடையும் தமிழ்உரை விளக்கத்துடன் கொடுக்கப்பட்டுள்ளது. பக்கம் 56—விலை ரூ. 5

தமிழாக்கம்: வித்வான் கண்ணன். 91, துளசிங்க முதலி தெரு, பெரம்பூர், சென்னை-600 011

மெய்ஞ்ஞானக் கும்மி, ஞானக் குறவஞ்சி, கைவல்ய நவநீதம், நானு சிவ வாதக் கட்டளை, விசார சாகரம், மகாராஜன் துறவு, வைராக்கிய தீபம், கீதாசாரத் தாலாட்டு, வேதாந்த சூடாமணி, சுரகீதை, பிரம்மகீதை முதலியன. இந்த நூல்கள் அனைத்தும் சங்கரருக்குப் பிறகு தோன்றியவையாகவே இருக்கும்.

சங்கரருக்கு முன்பும் தமிழ்நாட்டில் வேதாந்திகளும் வேதாந்த நூல்களும் இருந்திருக்க வேண்டும். உதாரணமாக, கி. மு. 7-ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த ஆசார்ய சுந்தரபாண்டியன் என்ற மகான், சங்கரருக்கும் முற்பட்டவரே ஆவார். ஆசார்ய சுந்தரபாண்டிய னுக்கும் முற்பட்டவர் என்று திரவிட ஆத்ரேயர் என்ற மெய்ஞ்ஞானியைப் பற்றிச் சொல்கிருர்கள்.

திரவிட ஆத்ரேயர், ஆசார்ய சுந்தர பாண்டியன் ஆகிய இருவரும் தமிழில் பல வேதாந்த நூல்களை இயற்றினர் என்றும், அவை கொள்வாரில்லாமையால் வழக்கொழிந்து போயின என்றும் சொல்லப்படுகிறது.

தமக்கு முன் வாழ்ந்த பெருஞானி யரான திரவிட ஆத்ரேயர், சுந்தரபாண்டி யன் ஆகியோரின் கருத்துக்களைச் சங்கரர் தமது நூல்களில் மேற்கோளாக எடுத் தாண்டிருக்கிருர் என்று பெரியோர் கூறுகிருர்கள். ஆனுல், சங்கரர் மேற் கோளுக்குப் பயன்படுத்திய தமிழில் எழுந்த அந்த மூலநூல்கள் தற்சமயம் வழக்கில் இல்லை.

ஆசார்ய சுந்தரபாண்டியன் எனப்படு பவர் அரசராக இருந்தவர். அவரை ராஜரிஷி என்று சொல்லலாம். அவர் சம்ஸ்கிருதத்தில் எழுதிய 'நீதிவிதுஷா' என்ற நூல் இப்போதும் வழக்கில் இருக்கிறது. அவரைப்பற்றி ஸ்ரீசங்கரர் குறிப்பிட்டிருக்கிருர்.



## ஞானம் என்ற நல்முத்து

ஜுனைய்ட் என்ற ஞானியைப் பார்த்து அவரது ஒரு சீடன், ''தங்களிடம் ஞானம் என்ற முத்து இருப்பதாகச் சொல்கிருர்கள். ஒன்று, அதை எனக்கு விற்று விடுங்கள், அல்லது, இனுமாகக் கொடுங்கள்'' என்று சொன்னுன்.

அதற்கு அந்த ஞானி, ''உனக்கு அதை நான் விற்பதற்கில்லை. ஏனென்ருல், அதன் விலையை உன்னுல் கொடுக்க முடியாது. இனுமாகக் கொடுத்தாலோ, அதை நீ மதிக்கமாட்டாய். ஆகவே நீயும் என்னைப் போல் கடவுள் என்னும் சமுத்திரத்தில் மூழ்கி எழுந்திரு. நீயும் ஒரு முத்து எடுத்துக்கொண்டு வரலாம்'' என்ருர்.



## கல்வி

கல்வி என்பது மக்களுக்குத் தெரியாததைச் சொல்லிக் கொடுப் பதல்ல. அவர்கள் எப்படி நடந்து கொள்ள வேண்டும் என்பதைச் சொல்லிக் கொடுப்பதுதான்.

—ரஸ்கின்

ஒரு பெண்மணி தன் கணவனின் மரணத்தை உண்மையென்றே நினைத்து, அவன் போனபிறகும் நான் உயிருடன் வாழ்ந்திருக் கிறேனே என்று முதன்முதலில் வெட்கமடைந்தாள். பிறகு, 'என் கணவர் உயிருடன் வாழ்ந்து கொண்டுதான் இருக்கிருர்' என்று எண்ணித் துயரத்தை விடுத்தாள்.

—ரகுவம்சம்

பகவான் நமக்குக் கொடுப்பதில் கருணை இருக்கிறது; அவர் நமக்குக் கொடுக்க மறுப்பதிலும் கருணை இருக்கிறது.

—கிரீஷ்சந்திர கோஷ்

ஒரு
நீதிக் கதை

# உண்மையான அன்பு

சமண மதத்தைச் சேர்ந்த இந்தக் கதை துளசிதாசரையும் லீலாசுகரையும் நினைவுபடுத்துகிறது.

நகிலா ஓர் அழகிய பெண். நகிலாவின் அழகில் மயங்கிய பவதேவன் அவளைத் தன் மனைவியாக்கிக்கொண்டான்.

நகிலாவின் அழகு பவதேவனை இந்த உலகையே மறக்கச் செய்தது. அவன் ஒவ்வொரு நாளும் நகிலாவைப் பல விதங்களில் அழகு செய்து ரசித்து வந்தான்

வசந்தகாலம் வந்தது. புத்தம்புதிய மலர்கள் பூத்துக் குலுங்கின. எங்கும் மலர்கள் மலர்ந்திருந்தன. இந்த மலர்களைவிட நகிலா தான் அழகி என்று அவள் புகழையே பாடிக்கொண்டிருந்தான் பவதேவன்.

ஒரு நாள் வீட்டின் முன்புறக் கதவைத் தட்டிய ஒலி கேட்டது. நகிலாவை விட்டு எழுந்து செல்ல மனமில்லாமல், ஒருவாறு எழுந்து சென்று கதவைத் திறந்தான் பவதேவன். அங்கே துறவி ஒருவர் நிற்பதைக் கண்டான்.

அவர் பல வருஷங்களுக்கு முன்பு இல்வாழ்க்கையைத் துறந்து துறவறம் மேற்கொண்டவர். பவதேவனின் மூத்த சகோதரர்தாம் அவர். அவரது பெயர் நாகதத்தர்

பவதேவனும் நாகதத்தரும் இளம் பிராயத்திலிருந்து ஒருவர்மீது ஒருவர் அளவிலா அன்பு பூண்டவர்கள்.

பல வருஷங்களுக்குப் பிறகு சந்தித்துக் கொண்ட இருவரும் நீண்ட நேரம் உரையாடினர். எதற்கும் ஓர் எல்லை உண்டல்லவா? நாகதத்தர் தம் தம்பியிடம் விடைபெற்றுத் திரும்பத் தயாரானார். பவதேவன் நாகதத்தரின் உணவேற்கும் பாத்திரத்தை மரியாதை நிமித்தமாகத் தன் கையில் எடுத்துக்கொண்டான். சிறிது தூரம் தொடர்ந்து சென்று வழியனுப்பி வைக்க எண்ணினான் பவதேவன்.

நாகதத்தரும் உணவேற்கும் கலத்தை 'என்னிடம் கொடு' என்று கேட்கவுமில்லை; பவதேவனாலும் 'இந்தாருங்கள் தங்கள் பாத்திரம்; நான் சென்று வருகிறேன்' என்று சொல்ல முடியவில்லை. இருப்பினும் நகிலாவின் மீதே அவனது எண்ணமெல்லாம் பதிந்திருந்தது.

தன்னை எதிர்பார்த்து நகிலா காத்திருப்பாள் என்பதும் பவதேவனுக்கு நன்றாகத் தெரியும். இருந்தாலும் என்ன செய்வது?

ஒரு நெல் பல நெல்லாய் விளைவது போல, ஒரு வினையும் பல வினைகளுக்குக் காரணமாக இருக்கும்.

—ஞானரத்னாவளி

மனதைக் கட்டுப்படுத்த இயலாதவன் பூஜை செய்து என்ன பயன்? கபடன் காவிரி அல்லது கங்கையில் நீராடினால் பரிசுத்தனாகி விடுவானா?

—மகான் தியாகராஜர்

நாகதத்தரிடம் சொல்லிக்கொண்டு வீட்டிற்குத் திரும்பவும் அவனுல் முடிய வில்லை; அத்தனை பாசம் நாகதத்தரிடம்.

இவ்வாறு ஒரு புறம் சகோதரபாசம்; மறு புறம் நகிலாவின்மீது ஆசை என்று பவதேவனின் மனம் தத்தளித்தது.

சகோதரர் இருவரும் காட்டை வந் தடைந்தனர்.

பவதேவன் நாகதத்தருடன் வந்ததைக் கண்ட பிற துறவியர், பவதேவன் துறவு ஏற்கவே வருகிறுன் என்று நினைத்து மகிழ்ந்தனர். தலைமைத் துறவி பவதேவனுக்குத் துறவற தீட்சையை அருள நாளும் குறித்துவிட்டார். பவதேவனுக்கோ ஒன்றும் தோன்றவில்லை. 'அண்ணனைத் தொடர்ந்து, துறவு மேற்கொள்ள இருக்கிறேன் என்று பிறர் கருதும் இந்தத் தருணத்தில் துறவை ஏற்க விருப்பமில்லை என்று எப்படிச் சொல்வது? ஐயோ!, அண்ணன் நாகதத்தருக்கு எத்தனை இழுக்கு?' பவதேவனுல் இதை நினைத்துப் பார்க்கவே முடியவில்லை. ஆனுல் அதே அளவிற்கு நகிலாவையும் அவனுல் மறக்கவே முடியவில்லை. நாகதத்தர் உயிர் வாழும்வரை அவருடன் இருந்துவிட்டு, பின்பு வீட்டுக்குச் சென்றுவிடலாம் என்ற உறுதியுடன் பவதேவன் வேறு வழியின்றித் துறவை மேற்கொண்டான்.

எப்படியோ பன்னிரண்டு வருஷங்கள் ஓடிவிட்டன. நாகதத்தரின் இந்த உலக வாழ்க்கையும் முடிந்தது. அன்றிரவே பிற துறவியர் யாருக்கும் தெரியாமல் துறவுப் பள்ளியினின்றும் நழுவித் தன் வீடு நோக்கி நடந்தான் பவதேவன். நெல்வயலையும் தோட்டங்களையும் கடந்து கடைசியில் கிராமத்தின் அருகில் வந்து சேர்ந்தான்.

இதற்குள்ளாகப் பொழுது புலர்ந்தது. அருகில் இருந்த மாந்தோப்பின் வழியாகத்தான் அவன் தன் வீட்டிற்குச் செல்ல வேண்டும். அப்போது மாந்தோப்பின் அருகே இருந்த இரண்டு பெண்களைக் கண்டான் பவதேவன். ஒரு கணம் ஏதோ யோசித்தான்.

ஒருவேளை பன்னிரு வருஷங்களுக்கு முன்பு விட்டுச் சென்ற தன் வீடு அப்படியே இருக்குமோ அல்லது சிதைந்திருக்குமோ? நகிலா இங்கு இருப்பாளோ அல்லது இருக்கமாட்டாளோ? நகிலாவைப்பற்றி விசாரித்த பிறகே தன்



வீட்டிற்குச் செல்ல வேண்டும் என்று நினைத்தான் பவதேவன். 'ஒருவேளை நகிலா இல்லையென்றால் கிராமத்துக் குள்ளே செல்வதனால் பயன் என்ன? திரும்பவும் காட்டுக்கே சென்றுவிடலாம்' என முடிவு செய்தான்.

இவ்விதம் சிந்தித்துக்கொண்டே கிணற்றருகே இருந்த இரு பெண்களில் ஒருத்தியிடம் நகிலாவைப்பற்றி விசாரித் தான். அவள் பவதேவனைக் கூர்ந்து நோக்கினாள். மறு விநாடி அவளது கண்களில் நீர் நிறைந்து வழிந்தது.

அவள், ''என்னைத் தங்களுக்கு அடை யாளம் தெரியவில்லையா?'' என்றாள். அவள் வேறு யாருமில்லை, நகிலாவே தான்!

இதைக் கேட்ட பவதேவன், ''நகிலா! நான்தான் உன் பவதேவன்!'' என்றான்.

## நரகத்திற்கே போ!

சந்நியாசி ஒருவர் ஏதோ படித்துக் கொண்டிருந்தார்.

அப்போது ஒருவன் அவர் பக்கத்தில் வந்து, ''சுவர்க்கம் ஒன்று இருக்கிறது என்ற நம்பிக்கை எனக்கு இல்லை. என்ன சொல்கிறீர்கள்?'' என்று கேட்டான்.

அதற்குப் பதில் சொல்லாமல் சந்நியாசி படித்துக்கொண்டே சென்றார்.

மீண்டும் அவன், ''சுவர்க்கம் இல்லை என்று சொல்கிறேன். என்ன சொல் கிறீர்கள்?'' என்றான்.

அதற்கு அவர், ''சுவர்க்கத்தில் நம்பிக்கை இல்லையென்றால், நரகத் திற்கே போயேன்'' என்றார்.

அவன் சொன்னதைக் கேட்ட நகிலா, ''நான் உங்கள் நகிலாவா?'' என்று சொல்லிச் சிரித்தாள். துறவைக் கைக் கொண்ட பின்னரும் தன்னைப்பற்றியே நினைக்கும் அளவிற்குத் தன்னிடம் அரிதாக ஒன்றும் இல்லையே எனச் சிந்தித்தாள்.

அன்பு குழைய, ''நகிலா! நாம் நம் வீட்டிற்குச் செல்வோமே!'' என்றான் பவதேவன்.

''வீட்டிற்கா? நாம் இங்கே தங்கி வாழ இடமே இல்லையே'' என்றாள் நகிலா.

''உண்மையிலேயே அங்கு இடமே இல்லையா?'' என்று வியப்புடன் கேட் டான் பவதேவன்.

ஒளிவுமறைவின்றிப் பேச ஆரம்பித் தாள் நகிலா: ''தாங்கள் கிடைப்பதற்கு மிகவும் அரிதான ஒப்பற்ற துறவு வாழ்க் கையை மேற்கொண்டிருக்கிறீர்கள். அத்தகைய துறவுநெறியினின்று தாங்கள் நழுவிக் கீழ்நிலைக்கு இறங்க நான் உதவு வேன் என்று எதிர்பார்க்கிறீர்களா? தங்களிடம் ஆழமான, உண்மையான அன்பு கொண்டவள் நான்!'' என்றாள், அமைதியாக.

பவதேவன் நகிலாவின் முகத்தையே உற்று நோக்கிக்கொண்டிருந்தான். அவன் கண்முன்னால் நகிலா ஒரு சாதா ரண மனித உருவமாகவே தெரியவில்லை. அவள் ஓர் அசாதாரணத் தெய்வத் தன்மை பொருந்தியவளாகவே அவ னுக்குத் தோன்றினாள். எத்தனை புனித மான அன்பு கொண்டவள் நகிலா! தூய்மையான அன்பு ஒரு புறம், கொடிய விஷம் போன்ற ஆசையோ மறு புறம். தன்னுடைய அன்பில் என்றும் நிலை பேறான புகழைக் கொண்ட பவதேவனைத் தான் நகிலா கண்டாள்.

பவதேவன் நகிலாவின் அன்பின் ஆழத்தை, அதன் ஒப்பற்ற தூய்மையை உணர்ந்தான். தன் நிலையை எண்ணினான்.

பவதேவன் எந்தப் பேரின்பத்தில் திளைக்க வேண்டும் என்று நகிலா மனப் பூர்வமாக விரும்பினாளோ அதற்காகவே அவன் அந்த இடத்தை விட்டகன்று, அதே வயல்வெளியைக் கடந்து திரும் பவும் காட்டை அடைந்தான், உண்மைத் துறவியாக.

பவதேவனின் இந்த முடிவுக்கு யார் காரணம்?

நன்றி—முக்குடை



# அறிவின் சிகரம் ஆதிசங்கரர்

டி. கே. நாராயணன்

வேதத்தின் பெயரால், இறைவனின் பெயரால் அதிக அளவில் உயிர்ப் பலி நடந்து வந்த காலம் அது. யாகத்தின் பெயரால் ஆயிரமாயிரம் வாயில்லாப் பிராணிகள் வதை செய்யப்பட்டன. இரத்த ஆறு ஓடியது. புனிதம் வாய்ந்த பாரதம் களங்கப்பட்டுக் காட்சி தந்தது. அந்த நிலைமையில் தோன்றியது புத்த அவதாரம். 'உயிர்ப் பலி கொடுப்பது தர்மமாகாது. அஹிம்சையே அனைத்திலும் சிறந்த தர்மம்' என்று புத்தர் போதித்தார். மனிதனைப் போலவே மற்ற உயிர்களும் இறைவனது படைப்புக்கள் என்றும், அவற்றைக் கொல்வதற்கு மனிதனுக்கு எவ்வித உரிமையும் கிடையாது என்றும், அப்படி உயிர்ப்பலி இட்டுச் செய்யும் யாகங்களால் எந்தப் பயனும் கிடையாது எனவும் புத்தர் போதித்தார்.

இப்படி உயிர்ப் பலி கொடுத்துச் செய்யப்பட்ட யாகங்களையும், அவற்றையொட்டிய சடங்குகளையும்பற்றிப் புத்தர் போதித்த போதனைகளைத் தவறாகப் புரிந்துகொண்ட மக்கள் பிற்காலத்தில் வேதங்கள் பொய், கடவுளே கிடையாது எனவும் பிரசாரம் செய்யத் தலைப்பட்டனர். நாட்டில் நாஸ்திகவாதம் தலைதூக்கி நின்றது. வேதங்களில் கர்மகாண்டத்தை வெறுத்த புத்தர், அவற்றில் அடங்கியுள்ள மேலான உண்மைகளைப் புறக்கணிக்கவில்லை என்ற உண்மையை உணராத பலர், வேதங்களையே இழித்துரைக்க முற்பட்டதைக் கண்டு நல்லோர் பலர் மனம் நொந்தனர். உண்மையை உள்ளவாறு புரிந்துகொள்ளும் ஆற்றல் பாரதத்தாயின் குழந்தைகளிடத்தில் இல்லையே என அவர்கள் கண்ணீர் விட்டனர். அந்தப் பரிதாப நிலை ஏன் ஏற்பட்டது எனவும் அந்தப் பெருமக்கள் ஆராய்ந்தனர். அந்த ஆராய்ச்சியின் விளைவாக உண்மை அவர்களுக்குப் புலனாயிற்று. வேதங்கள் உபநிடதங்களில் காணப்படும் அரிய கருத்துக்களை மக்கள் தவறாகப் புரிந்துகொண்டிருக்கின்றனர். ஆகையால், உயரிய உபநிடதத் தத்துவங்களை எளிய முறையில் மக்களுக்குப் புரிய வைப்பதே தங்களது தலையாய பணி என்பதை அவர்கள் உணர்ந்தனர். இந்த உயர்நோக்கத்துடன் நாடெங்கும் அவர்கள் கால்நடையாகச் சுற்றுப்பயணம் செய்து வேதநெறியை மக்களிடம் மீண்டும் தழைக்கச் செய்தனர். மக்கள் மனத்தில் இருந்த அறியாமை இருளை அகற்ற, அவர்கள் பெரிதும் பாடுபட்டனர். பாரதத்தில் ஆஸ்திகம் மீண்டும் தழைக்க ஆரம்பித்தது. அத்தகைய மாபெரும் பணியில் தங்களை அர்ப்பித்தவர்களில் தலையானவர் ஆதிசங்கரர்.

கேரளத்தில்- காலடியில் தோன்றியவர் சங்கரர். அவர் தமது குறுகிய ஆயுளான முப்பத்திரண்டு வயதிற்குள் பாரதத்தில் பன்முறை சுற்றுப்பயணம் செய்து மாபெரும் அறிவுப் புரட்சியை ஏற்படுத்தினர். வேதாந்தக் கொடி நாட்டி எங்கும் வேதாந்தக் கருத்துக்களைப் பரப்பினர். பாரதத்தின் நான்கு மூலைகளில் நான்கு மடங்களை ஸ்தாபித்தார். அத்வைதப் பிரசாரத்திற்கு இன்றும் அந்த மடங்கள்பெரும் பணியாற்றி வருகின்றன. தர்க்கபூர்வமான சங்கரரது போதனைகள் மக்களிடையே பெரும் மாற்றத்தை உண்டாக்கின.







கண்மூடித்தனமான வெற்றுச் சடங்குகளையே உண்மை மதம் என்று வீண்வாதம் செய்தவர்கள் சங்கரரது அறிவுத் திறத்தைப் போற்றலாயினர். கர்மகாண்டத்தில் பெருநம்பிக்கை கொண்ட மண்டனமிச்ரர் போன்ற மாபெரும் அறிஞர்களையும் தமது வாதத்திறத்தினுல் அவர் வென்றுர்.

ப்ரஸ்தானத்ரயமாக விளங்கும் உபநிஷதம், பிரம்மஸூத்திரம், பகவத்கீதை ஆகியவற்றிற்கு அரிய முறையில் பாஷ்யம் செய்து அவர் நாடெங்கும் அத்வைதப் பிரசாரம் செய்தார். 'கர்மத்தைவிட ஞானமே சிறந்தது' என்ற உண்மையை மக்களுக்கு உணர்த்தினுர். ஞானத்திற்கு ஏற்றம் கொடுத்த சங்கரர் பக்தி மார்க்கத்தையும் புறக்கணித்தாரில்லை. அவரது பல்வேறு பக்தி ஸ்தோத்திரங்களை இன்றும் நாம் தினமும் பாராயணம் செய்து வருகிறோம். அவர் இயற்றிய பஜகோவிந்தத்தின் பெருமையை அனைவரும் அறிவர்.

எளிதில் புரிந்துகொள்ள முடியாத கடினமான உபநிடதக் கருத்துக்களைப் பல அரிய எடுத்துக்காட்டுக்களின் மூலம் எளிய முறையில் எடுத்து விளக்கிய பெருமை சங்கரரையே சாரும். 'ஜீவாத்மாவான மனிதன் பரமாத்மாவான இறைவனிலிருந்து வேறுபட்டவன் அல்லன். மனிதனிடம் இருக்கும் அறியாமை அகன்றுல் அவன் பரம்பொருளில் ஒன்றுகிறுன்' என்பதே அவரது போதனைகளின் சாரம்.

பொதுவாகப் பார்க்கையில், இந்தியத் தத்துவம் நான்கு அடிப்படைக் கேள்விகளுக்கு விடை காண முயலுகிறது. இந்தியத் தத்துவஞானி முதலில் தமக்குப் புறம்பான வெளி உலகைப் பார்க்கிறுர். பரந்து விரிந்த அண்டம் அவரிடத்தில் பெருவியப்பை உண்டாக்குகிறது. எண்ணிலடங்காத நக்ஷத்திரங்களும் கிரகங்களும் அவரை ஆச்சரியத்தில் ஆழ்த்துகின்றன. இப்படி அதிசயித்து நிற்கும் அவர் மனதில், தாம் வாழும் பூவுலகின் தன்மை என்ன என்ற கேள்வி எழுகிறது. அடுத்தபடியாக, புறத்தே பார்த்த அவர் தம்மையே நோக்கி, 'நான் யார்?' என்ற கேள்வியை எழுப்புகிறுர். இது இரண்டாவது கேள்வி. அடுத்து, தம்மைச் சுற்றியுள்ள எல்லாப் பொருள்களும் இடைவிடாத மாற்றத்திற்கு உள்ளாவதையும், அனைத்தும் தோன்றி மறையும் தன்மை படைத்திருப்பதையும் அவர் காண்கிறுர். மாறுதலுக்கு உள்ளாகும் இந்த அண்டத்தின் அடிப்படையாக அமையும் மூலப்பொருள் எது, அதன் தன்மை யாது என்ற கேள்வி எழுகிறது. இது மூன்றுவது கேள்வி. இறுதியாக, அந்த மூலப்பொருளுக்கும் தமக்குமிடையேயும் அதுபோலத் தனக்கும் உலகிற்கும் உள்ள தொடர்பு என்ன என்ற கேள்வி எழுகிறது. இதுவே நான்காவது கேள்வி. பல்வேறு ஞானிகள் பல வகைகளில் இந்தக் கேள்விகளுக்கு உரிய பதிலைப் பெற முயன்றனர். இந்த கேள்விகளுக்குச் சங்கரர் தந்த பதிலைக் காண்போம்.

உபநிடதங்களின் அடிப்படையில் சங்கரர், தெரிந்தவற்றின் துணைகொண்டு தெரியாததொன்றை அறியும் முயற்சியில் ஈடுபடுகிறுர், கண்ணுக்குப் புலப்படுவதன் மூலம் கண்ணுக்குப் புலப்படாததை அறிய அவர் முனைகிறுர். பரம்பொருளைப் பற்றிய அவரது கருத்துக்களைச் சில எளிய உதாரணங்களால் விளக்கலாம். தமது ஆராய்ச்சிக்குக் களிமண்ணை உதாரணமாக அவர் எடுத்துக்கொள்கிறுர். களி மண்ணைக் கொண்டு பானை, குடம் போன்ற பல்வேறு பொருள்களைச் செய்யலாம். தோற்றத்தில் மாறுபட்டுக் காணப்படும் இந்தப் பல்வேறு விஷயங்களுக்கும் அடிப்படையாக அமைவது ஒரு பொருளே. அதுவே களிமண். தனித்தனி வடிவங்களையுடைய அவை பல்வேறு பெயர்களையும் பெறுகின்றன.



குருவாயூரின் தலைவனே! உன் திருவடித் தாமரை மலர்களில் செலுத்தப்படும் பக்தியே எல்லா அச்சங்களையும் போக்கும்; விரும்பியவற்றை எல்லாம் கொடுக்கும் என்று நீயே எனக்கு உறுதியாக அறிவுறுத்தினாய்.

—நாராயணீயம்

அந்த வடிவங்கள் இருக்கிறவரை அவற்றுக்கு அந்தப் பெயர்கள் அமைந்திருக்கும். பானை, குடம் முதலியவை உடைந்துபோகின்றன என வைத்துக் கொள்வோம். அப்பொழுது அவை தங்களது தனித் தனிப் பெயர்களை இழந்து விடுகின்றன. இறுதியில் எஞ்சி நிற்பது களிமண்தான்.

மேற்கூறிய உதாரணங்களின் மூலம் சங்கரர் பரம்பொருளைப் பற்றிய உண்மையை உணர்த்துகிறார். நாமரூபங்களில்தான் மாறுபாடே தவிர, மூலப் பொருளில் மாற்றம் இல்லை. சங்கிலி, மோதிரம் ஆகியவை பலவாகக் காட்சியளித்தாலும், ஒரு பொருளாகிய தங்கத்தின் விளைவுகளே அவை. ஆக, விளைவுகள் நாமரூபத்தால் பலவாகக் காட்சி தருகின்றன; ஆனால் மூலம் ஒன்று. மேற்காணும் இந்த இரண்டு உதாரணங்களின் துணைகொண்டு உலகத்தை ஆராய்வோமானால், உலகில் காணப்படும் அனைத்தும் பலவாருகக் காட்சி தருகின்றன. அவை அனைத்தும் ஒரு மூலப் பொருளிலிருந்தே வந்திருக்க வேண்டும். இங்கு மற்றொன்று கவனிக்க வேண்டியது—உலகில் காணப்படும் பல்வேறு பொருள்களுக்கு அடிப்படையாக விளங்கும் மூலப்பொருளுக்கு எவ்விதக் காரணமும் இருந்திருக்க முடியாது என்பதாகும். அதுவே மூலப்பொருளான பிரகிருதி. அது எந்தவித மாறுதலுக்கும் அப்பாற்பட்டது. அனைத்து நாம ரூபங்களையும் கடந்தது அது.

'உலகின் தன்மை என்ன?' என்ற முதற் கேள்விக்கு உரிய பதில் மேற்கூறியதிலிருந்து கிடைக்கிறது. எது மாறுகிறதோ அது நிலையில்லாதது. எது நிலையில்லாததோ அதுவே மாயை. ஆகவே உலகில் காணும் அனைத்தும் மாறுதலுக்கு உட்பட்டவை. எனவே உலகம் மாயை. மாயை என்னும் பதத்தை ஆராய்ந்தால் உண்மை புலனாகும். 'யா மா ஸா மாயா'—அதாவது எது சற்று முன்பு இருந்தது போல இப்பொழுது இருப்பதில்லையோ அதுவே மாயை. விஞ்ஞானமும் இதையே வலியுறுத்துகிறது. மாயைக்கு அப்பாற்பட்ட பரம்பொருளின் பல்வேறு தோற்றங்களே இவை. தோற்றம் உண்மைப்பொருளாகாது. கண்ணாடியில் தெரிவது தோற்றம். அது உண்மைப் பொருளல்ல. அந்தத் தோற்றம் காரணமாக எது அமைகிறதோ அதுவே உண்மையாகும். எனவே நாமரூபத்தினிடம் அமையும் உலகம் மாயை. பரம்பொருளே மெய். இதைத்தான், 'ப்ரஹ்ம ஸத்யம், ஜகத் மித்யா' என்ற வாக்கியம் விளக்குகிறது.

அடுத்து வரும் கேள்வி, 'அந்தப் பிரம்மம் எது?' என்பதாகும். இதற்கு உபநிடதங்கள் கூறும் பதில்—'எதிலிருந்து அனைத்தும் தோன்றுகின்றனவோ, எதில் அனைத்தும் இருக்கின்றனவோ, எதில் அனைத்தும் லயமாகின்றனவோ அதுதான் பிரம்மம்' என்று அவை தெரிவிக்கின்றன. உலகப் பொருள்களைக் கொண்டு அந்தப் பிரம்மத்தை எப்படி விளக்குவது? 'இது அல்ல, இது அல்ல' என்ற கூற்றின் மூலம், எது இவை இல்லையோ அதுவே பிரம்மம் என்ற பதில் கிட்டும். அதாவது அந்தப் பிரம்மம் வாக்கிற்கும் சிந்தனைக்கும் அப்பாற்பட்டது. அந்தப் பிரம்மம் வாசாமகோசரம், அநிர்வசனீயம். அது உணர்வதற்கு உரியது. விளக்கத்திற்கு அப்பாற்பட்டது. பிரம்மத்திற்கு நிகர் பிரம்மம்தான்; வேறில்லை. பிரம்மம் சத்-சித்-ஆனந்தப் பரம்பொருள்.

அடுத்ததாக, ஜீவாத்மாவைப் பற்றிய விளக்கம் எழுகிறது. மாயா ஸஹிதனான சிவன் ஜீவனாகவும், மாயா ரஹிதனான ஜீவன் சிவனாகவும் காட்சி தருகிறது. சிவனையும்

ஜீவனையும் பிரிப்பது மாயையாகிய திரை. இந்த அஞ்ஞானத் திரை அகன்றால், ஜீவன் சிவனுடன் ஐக்கியமாகிவிடுகிறது. ஜாக்ரத், ஸ்வப்ன, சுஷுப்தி போன்ற பல நிலைகளுக்கு உள்ளாகிறது ஜீவாத்மா. விழிப்பு நிலையில் சரீரம், மனம், புத்தி ஆகிய அனைத்தும் செயலாற்றுகின்றன. கனவு நிலையில் சரீரம் செயலற்றுவிடுகிறது; மனமும் புத்தியும் மட்டும் செயற்படுகின்றன. கனவற்ற நிலையில் சரீரம் மனம் ஆகிய இரண்டும் செயலற்றனவாகிவிடும். அந்த நிலையில் புத்தி அல்லது உணர்வு மட்டும் எஞ்சி நிற்கிறது. ஜீவாத்மாவின் உண்மைநிலை அறிவுச் சொரூபமாகும். இந்த மூன்று நிலைகளையும் கடந்த இறுதி நிலையான துரீயத்தில் எல்லையற்ற பேரின்பம் நிலவுகிறது. ஜீவாத்மாவின் அடிப்படைத் தன்மை சத்-சித்-ஆனந்தமேயாகும்.

இதுவே ஆத்மா என்றும் அழைக்கப்படுகிறது. பிரம்மத்தின் தன்மையும் சத் சித் ஆனந்தமேயாகும். எனவே ஆத்மாவும் பிரம்மமும் ஒன்றே, வேறல்ல என்ற முடிவான நிலைக்கு வருகிறோம். இந்தக் கருத்துத்தான் சங்கரர் புகட்டிய அத்வைதத்தின் அடிப்படையாக அமைகிறது. 'ஜீவோ ப்ரஹ்மைவ நாபர:' என்ற வாக்கியம் இதை விளக்குகிறது.

'நாமரூபங்களால் ஆகியது இந்த உலகம்; உண்மையில் இருப்பது பிரம்மம் ஒன்றுதான்' என்பது உண்மையென்றால், ஏன் அது நமக்கு எளிதில் புலனாவதில்லை? என்ற கேள்வி அடிமனத்தில் எழலாம். இதற்குச் சங்கரர் ஓர் அழகான உதாரணத்தை எடுத்துக் காட்டுகிறார். கருகரு என்று இருக்கும் வேளையில், தனியே நடந்து செல்லும் ஒரு மனிதன் சற்றுத் தொலைவில் சுருண்டு கிடக்கும் ஒரு பொருளைப் பார்க்கிறான். அது பாம்பாக இருக்கலாமோ என்ற எண்ணம் உடனே அவன் மனதில் எழுகிறது. கூடவே அச்சமும் உண்டாகிறது. உடல் வேர்க்கிறது. நடை தளர்கிறது. அடிமேல் அடிவைத்து அவன் முன்செல்லுகிறான். அந்தப் பொருளுக்கு மிகவும் அருகில் வந்துவிட்டான். அதில் எந்தவித அசைவும் காணப்படவில்லை என்று அறிந்த அவன் தைரியத்துடன் அதை நெருங்குகிறான்.



இப்பொழுது அவனுக்கு உண்மை புலனாகிறது. 'இது பாம்பல்ல; சுருண்டு கிடக்கும் கயிறு' என்ற உண்மையை உணர்ந்தவுடன் பாம்பு பற்றிய எண்ணம் அறவே அகன்றுவிடுகிறது. அது போல், உண்மையை அறியாத நிலையில் உலகம் உலகமாகக் காட்சி தருகிறது. உண்மையறிவு உதயமானவுடன், அனைத்தும் பிரம்ம சொரூபம் என்று அறிந்தவுடன், உலகம் பிரம்மத்தில் லயமாகிவிடுகிறது. எல்லாம் பிரம்மமயமாகக் காட்சியளிக்கிறது. இந்த நிலையில் அறிவோன், அறிவு, அறியப்படுபொருள் ஆகிய அனைத்தும் ஒன்றிவிடுகின்றன. இறுதியில் எஞ்சியிருப்பது ஒன்றே. அதுவே பிரம்மம். 'ப்ரஹ்மவித் ப்ரஹ்மைவ பவதி' என்ற வாக்கியத்திற்கொப்ப, பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகவே ஆகிவிடுகிறான். இந்த நிலையை ஜீவன் எப்பொழுது அடைகிறான் என்ற கேள்விக்கு, கீதை விடை தருகிறது—'பஹூநாம் ஜந்மநாம் அந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே' என்று பகவான் கிருஷ்ணர் கூறியபடி, பல்வேறு பிறவிகளுக்குப் பின்பு உண்மையறிவு வரப்பெற்றவன், 'அஹம் ப்ரஹ்மாஸ்மி, தத் த்வம் அஸி' போன்ற மகாவாக்கியங்களின் உட்பொருளை உணர்ந்த அந்த ஞானி பிரம்மத்தில் ஐக்கியமாகிவிடுகிறான்.

இந்த அரிய மேலான அத்வைதக் கோட்பாட்டை அருளி, 'அனைவரும் இறைசொரூபம்' என்பதை உணர்த்திய அறிவின் சிகரம் ஆதிசங்கரரது போதனைகளை நாம் நன்கு உணர்ந்து, வாழ்வில் கடைப்பிடித்து எங்கும் பரப்புவோமேயானால் அதுவே அவரை நாம் நன்கு போற்றும் விதமாகும் என்பதில் சிறிதும் ஐயமில்லை.

# சிதம்பரம் கோயில்

-ராஜம் ஜயராமன்-

**சிதம்பரத்தைத் தரிசிக்க முக்தி என்றும், விராட்புருஷனின் இதயஸ்தானம் சிதம்பரம் என்றும் சொல்லப்படுகிறது.**

சிதம்பரம் எனப்படும் திருச்சிற்றம்பலம் மிகவும் பழமையான புனிதத் தலம். இதன் தோற்றம் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்டது.

தில்லை என்பது ஊரின் பெயர். சிதம்பரம் என்பது கோயிலின் பெயர்.

மன்றம், புண்டரீகபுரம், வியாக்கிர புரம், புலியூர், திருச்சிற்றம்பலம், சிதம்பரம், அம்பரம், அம்பலம், பொது பெரும்பற்றப்புலியூர் முதலிய பல பெயர்கள் தில்லைக்கு வழங்கிவருகின்றன.

பஞ்சபூதத் தலங்களுள் ஆகாயத் தலமாகவும், ஆறு ஆதாரத் தலங்களுள் அநாகதத் தலமாகவும், இறைவன் திரு நடனம் புரியும் ஐந்து சபைகளுள் கனக சபையாகவும் விளங்குவது சிதம்பரம்.

இறைவனின் விராட் சொருபமான பூவுலகத்தின் இதய ஸ்தானமாக இருப்பது சிதம்பரம் என்று சொல்வது மரபு. இது எல்லாத் தலங்களிலும் வழி படப்பெறும் சைவ, வைணவ, சாக்த, வைநாயக, சௌர, பைரவ, கிராம தேவதைகள் முதலிய அனைத்துத் தெய் வங்களின் ஜீவகலையை இரவில் தன்னிடம் ஒடுக்கி, மீண்டும் பகலில் அந்த அந்தத் தெய்வங்களிடம் ஜீவகலையைப் பிரகா சிக்கச் செய்யும் சிறப்பைக் கொண்ட தாகவும் விளங்குகிறது.

பிரம்மாண்டமே பிரம்மபுரம் என்றும், பிரம்மாண்டத்திலுள்ள தில்லையே புண்டரீக வீடு (இதயத்தின் இருப்பிடம்) என்றும், இங்கு நடனமாடும் சிவமே ஆகாசம் என்றும், இந்த ஆகாசமே சித்தாகாசமானதால் இது சிதம்பரம் என்றும் கூறப்படுகிறது.

சிதம்பரத்தைச் சுற்றித் திருச்சி, திருப்பதி, ஸ்ரீரங்கம், புஷ்கரம், அட்ட வீரட்டம், ஆரூர், ஆவுடையார்கோயில், திருக்கோணமலை, விந்தியமலை, திருக் கழுக்குன்றம், திருவானைக்கா ஆகிய பதினெரு ஸ்தலங்கள் அமைந்துள்ளன. இந்த ஸ்தலங்களில் எழுந்தருளியிருக்கும் விநாயகர், முருகப்பெருமான், விஷ்ணு, பிரம்மா, வைரவர், சோமாஸ்கந்தர், தட்சிணாமூர்த்தி, நந்தி, துர்க்கை, சண்டேசர் ஆகிய மூர்த்திகள் சிதம்பரம் கோயிலில் பரிவார தேவதைகளாக இருப்பிடம் கொண்டுள்ளனர்.



சிதம்பரம் கோயிலில் ஒரு பகுதி


சிதம்பரம் கோயில் சிற்சபையின் பின்புறத் தோற்றம்

மேலும், கோகர்ணம், ஸ்ரீசைலம், திருவிடைமருதூர், காசி, மதுரை ஆகிய தலங்களில் வழிபடப்படும் மூர்த்திகளை ஈசானம், தத்புருஷம், அகோரம், வாமதேவம், சத்யோஜாதம் என்ற பஞ்ச முகங்களாகவும் கொண்டது சிதம்பரம்.

சித்சபை, கேதாரம், திருவண்ணாமலை, காளஹஸ்தி, காஞ்சிபுரம், ராமேசுவரம், ஆகிய தலங்களை முறையே இதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அஸ்திரம் என்ற ஆறு அங்கங்களாகக் கொண்டு சிதம்பரம் விளங்குவதாகவும் கூறப்படுகிறது.

மூர்த்தி, தலம், தீர்த்தம் ஆகிய சிறப்புக்களையும் சிதம்பரம் பெற்றிருக்கிறது.

அருவம், உருவம், அருவுருவம் ஆகிய மூன்று விதமான வழிபாடுகளும் சிதம்பரம் கோயிலுக்கே உரிய தனிச் சிறப்பாகும். மற்றக் கோயில்களில் இவ்விதம் மூன்று நிலைகளிலும் கர்ப்பக் கிருகம் இருப்பது அரிது.

அருவம் — சிதம்பர ரகசியம்.

உருவம் — நடராஜர் சிவகாமியம்மை.

அருவுருவம் — சந்திரமௌலீச்வரர் (ஸ்படிக லிங்கம்)

### அருவ வழிபாடு (சிதம்பர ரகசியம்)

சித் - ஞானம், அம்பரம் - ஆகாயம். எனவே சிதம்பரம் என்றால் ஞான ஆகாசம், அறிவு வெளி என்பது பொருள். இறைவனை ஆகாச வடிவத்தில் அருவமாக வழிபடுவதனால் ரகசியம் என்று கூறுவர்.

நடராஜப் பெருமான் நடம் புரியும் சிற்சபையில் நடராஜ மூர்த்திக்கு வலப்புறத்தில் 'சிதம்பர ரகசியம்' உள்ளது. இங்கே சுவரில் பொன்னால் செய்யப்பட்ட வில்வச் சரங்களும், நடராஜரும் சிவகாமியம்மையும் எழுந்தருளியுள்ள சம்மௌனச் சக்கரமும் (சிதம்பர சக்கரமும்) நிறுவப்பட்டுள்ளன. இவற்றை மறைத்துத் திரையிட்டுள்ளனர். பூஜையின் போது திரையை நீக்கித் தரிசனம் செய்விப்பார்கள். சிதாகாசப் பெருவெளியில் இறைவன் ஒளிவடிவில் தோன்றுவது போல் ஸ்வர்ணஜோதியாக இங்கே தோன்றுகிறான். இதுவே சிதம்பர ரகசியம் எனப்படும். நமது ஊனக் கண்களுக்குத் தெரிவதற்காகவே இங்கே வில்வச் சரங்கள் தொங்கவிடப்பட்டுள்ளன.

நள்ளிரவு வழிபாட்டிற்குப் பிறகு எல்லாத் தெய்வங்களின் ஜீவகலைகளும்

(சின்மயமான ஆற்றல்கள் அனைத்தும்) இந்தச் சிதம்பர ரகசியத்தில் வந்து ஒடுங்குவதாகவும், பின்பு அதிகாலை முதற்கால வழிபாடு முடிந்ததும் தத்தம் இடங்களுக்குத் திரும்புவதாகவும் கூறப்படுகிறது. இதை, 'ஓர் கலை எங்கும் உலவி அர்த்த ஜாமத்தில் பூரணமாய் ஒடுங்கும் புலியூரே' என்ற ஆன்றோர் வாக்கினால் உணரலாம்.

பஞ்சபூதங்களும் முடிவில் ஆகாயத் தத்துவத்தில் ஒடுங்குவதையும் இது குறிக்கிறது. சிதம்பரத்தில்தான் நந்தனாரும் மாணிக்கவாசகரும் ஜோதிஸ்வரூபமாக இறைவனுடன் இரண்டறக் கலந்தனர் என்று வரலாறு கூறுகிறது.

உருவ வழிபாடு (நடராஜர் - சிவகாமியம்மை)

இயற்கையின் ஓயாத இயக்கமே இறைவனின் திருக்கூத்து. இந்த உண்மையை உருவகமாக நடராஜ தாண்டவம் உணர்த்துகிறது.

இந்தத் தலத்தில் எழுந்தருளியிருக்கும் நடராஜர் தமது ஆனந்தத் தாண்டவத்தின் மூலம் ஐந்தொழில் புரிகிறார். ஆதலால், அதைப் பஞ்சகிருத்திய நடனம் என்று சொல்வார்கள்.

பஞ்சாட்சரத்தையே திருமேனியாகக் கொண்டு நடனம் புரிவதனால் 'பஞ்சாட்சர நடனம்' என்றும் நடராஜ தாண்டவத்தைக் குறிப்பிடுவதுண்டு.

அழிவற்ற ஆன்மா முக்குணங்களுக்கு உட்பட்டு, விழிப்பு, கனவு, ஆழ்ந்த உறக்கம் என்ற மூன்றுவித அவஸ்தைகளில் சிக்கிப் பிறப்பு இறப்பு என்ற சுழலில் தவிக்கிறது. இத்தகைய ஆன்மா மாயையிலிருந்து விடுபட்டுத் தனது உண்மைச் சொரூபமான சிதாகாசத்தை அடைந்து, பிரம்மானந்தத்தை அனுபவிப்பதை நடராஜரின் திருவுருவம் உணர்த்துகிறது.

இந்தப் பிரபஞ்ச மாயையின் (முயலகன்) மீது நடராஜரின் திருவுருவம் ஒரு காலை ஊன்றி, மற்றொரு பாதம் மேலே தூக்கியபடி இருப்பது ஆன்மா துரிய நிலைக்கு உயர வேண்டும் என்பதைக் காட்டுகிறது. இந்த நிலை ஏற்படுவதற்கு அகங்காரம் முற்றிலும் அழிக்கப்பட வேண்டும். இந்த அகங்காரம் யாரைக் கண்டாலும் சீறும் புலியின் தன்மை கொண்டது. அத்தகைய அகங்காரம் என்ற புலியைக் கொன்று, அதன் தோலைச் சிவனார் ஆடையாக உடுத்தியுள்ளார். அவரது ஒரு வலக் கையில் உடுக்கை இருக்கிறது. இது பிரபஞ்சத் தோற்றமாகிய நாத தத்துவத்தை விளக்குகிறது. இடக் கையிலுள்ள தீ அஞ்ஞானத்தை அழிக்கும் ஞானாக்கினியைக் குறிக்கிறது. ஞானத் தீயில் அழியும் வியாவகாரிக உலகம் நீறாக (சாம்பராக) மாறிப் பிரபஞ்சத்திலிருந்து விடுபடும் ஆன்மாவிற்கு ஆவரணமாக (திருநீற்றுப் பூச்சாக) ஆகிறது. நடராஜ


சிதம்பரம் கோயிலில் ஒரு காட்சி

ரின் மற்றொரு வலக் கை அபய கரம். அவரது மற்றொரு இடக் கை தூக்கிய பாதத்தைக் காட்டுகிறது. இது, 'இறைவன் திருவடியை அடைய முயலுங்கள்' என்ற குறிப்பை உணர்த்துகிறது.

நடராஜரின் அருகிலுள்ள மான் மனிதனின் மனதைக் குறிக்கிறது. அலை பாயும் மனம் அங்கும் இங்கும் தாவும் தன்மை கொண்டது. அத்தகைய மனதைக் கட்டுப்படுத்தி, அதை இறைவனின் அருகில் எப்போதும் இருக்கும்படி செய்ய வேண்டும்.

நடராஜரின் தலையிலுள்ள கங்கை, ஞானத்தின் வடிவமாகவே திகழ்கிறது. சந்திரன், ஆத்மப் பிரகாசத்தையும் குளுமையையும் உணர்த்தும். எனவே, இந்த நடனத்தின் தத்துவமயமான உண்மைகளை அனுபூதியில் தரிசிப்பவர்களுக்கே பிறவா நிலை சித்திக்கும்.

தமிழகத்தில் நடராஜப் பெருமான் தாண்டவம் புரிந்த தலங்கள் ஐந்து. அவை முறையே திருவாலங்காடு (இரத்தின சபை), சிதம்பரம் (பொற் சபை), மதுரை (வெள்ளி சபை), திருநெல்வேலி (தாமிர சபை), திருக்குற்றாலம் (சித்திர சபை) முதலிய இடங்களாகும். இந்த ஐந்து சபைகளுள் ஒன்றான சிதம்பரம் தன்னுள் ஐந்து சபைகளையும் கொண்டு விளங்குகிறது.

## அருவுருவ வழிபாடு

இறைவன் அருவுருவமாகிய சிவலிங்கத் திருமேனி கொண்டு திருமூலநாதர் என்ற பெயருடன் விளங்குகிறார். இது சுயம்பு லிங்கமாக ஆலமர நிழலில் தோன்றியது என்று புராண வரலாறு கூறுகிறது.

இந்தத் திருமூலநாதரை வழிபட்டுப் பதஞ்ஜலி, வியாக்கிரபாதர் ஆகிய இருவரும் இறைவனது ஆனந்தத் தாண்டவத்தையும் சிதம்பர ரகசியத்தையும் தரிசித்துப் பேறு பெற்றனர். இந்தத் தரிசனத்திற்குப் பின்பு பதஞ்ஜலிமுனிவர் நடராஜ மூர்த்திக்கும் சிவகாமியம்மைக்கும் நித்திய நைமித்திக விசேஷ பூஜைகள் நடைபெறும் பொருட்டு, 'பூஜா சூத்திரம்' என்ற வைதிகப் பூஜை முறையை ஏற்படுத்தினார். அது முதற்கொண்டு இங்கு மற்றத் தலங்களில் இல்லாத விசேஷ முறைகளில் பூஜைகள் நடைபெற்று வருகின்றன என்று சொல்லப்படுகிறது.

## சித்சபை

சிதம்பரம் கோயிலில் நடராஜப் பெரு

சிதம்பரம் கோயிலின் ஒரு தோற்றம்



மானின் ஆனந்தத் தாண்டவம் நடைபெறும் சபை சித்சபை எனப்படும். இதுவே முதன்மையானதும் சிறந்ததும் மூலஸ்தானமும் ஆகும்.

இங்கே பஞ்சாட்சரங்கள் ஐந்து படிகளாக அமைக்கப்பட்டுள்ளன. அவற்றைக் கடந்து சென்றதும் பிரம்மா, விஷ்ணு, ருத்திரன், மகேச்வரன், சதாசிவன் ஆகியோருக்குப் பஞ்ச பீடங்கள் அமைந்துள்ளன. ஐந்தாவதாகிய சதாசிவ பீடத்தில் நடராஜப் பெருமான் சிவகாமியம்மையுடன் ஆனந்தத் தாண்டவம் புரிகிறார். இவர்களுக்குப் பின்புறம் அருவத் திருமேனி கொண்டு, சிதாகாச வடிவில் இறைவன் ரகசியமாக விளங்குகிறான்.

நடராஜருக்கு முன்புறம் ஸ்படிக லிங்கமும், இரத்தின சபாபதியும், இடப் பக்கத்தில் ஸ்வர்ண காலபைரவரும் நித்திய உற்சவரும் உள்ளனர்.

இந்தச் சிற்சபை மரத்தால் அமைக்கப்பட்டுள்ளது. குகைக் கோவில், கற்கோவில் காலத்திற்கு முன்பே கட்டப்பட்டது இந்தச் சிற்சபை.

சிற்சபையின் அமைப்பு, நமது சரீரத்தின் அமைப்பை ஒத்திருக்கிறது. இறைவன் இதயக் கோயிலில் குடிகொண்டுள்ளான் என்பதை உணர்த்தும் வகையில் சிற்சபை அமைக்கப்பெற்றிருக்கிறது.

சிற்சபையின் மேலே உள்ள ஒன்பது கலசங்களும் ஒன்பது நவசக்திகளையும், கதவுகள் அவித்தை அல்லது ஆவரணத்தையும் உணர்த்துகின்றன.

விமானத்திலுள்ள கைமரங்கள் அறுபத்துநான்கும் அறுபத்துநான்கு கலையைக் குறிக்கின்றன. 96 தத்துவங்கள் இங்கே பலகணிகளாகவும் உள்ளன. மனிதன் ஒரு நாள் விடும் சுவாசம் 21,600. அதைக் குறிப்பிடும் வகையில் 21,600 செப்பேடுகள் சிற்சபையில் வேயப்பட்டுள்ளன. சுவாசங்களுக்கு ஆதாரமான 72,000 நாடிகளைக் குறிக்க 72,000 ஆணிகளைச் செப்பேடுகளை இணைக்கப் பயன்படுத்தியுள்ளனர். ஒவ்வொரு செப்பேட்டிலும் 'சிவாய நம:' என்ற பஞ்சாட்சரம் எழுதப்பட்டுள்ளது.

சபையின் நடுவிலுள்ள நான்கு பொற்கம்பங்கள் நான்கு வேதங்கள் என்றும், இருபத்தெட்டு மரக் கம்பங்கள் ஆகமங்களைக் குறிக்கும் என்றும், மூர்த்திகள் எழுந்தருளியுள்ள பீடம் பிரணவ பீடம் என்றும் தில்லையுலா கூறுகிறது. ●●●●


திருச்செந்தூர் கடற்கரையில் அமைந்திருக்கும் முருகன் கோயில்




## தியாகராஜரின் அருள்மொழிகள்

தொகுப்பு : விவேகானந்ததாசன்

மகான் தியாகராஜரின் பாடல்களில் இடம் பெற்றுள்ள விழுமிய சில அமுத மொழிகள் வருமாறு.



1. பக்திப் பாற்கடலில் நீந்தித் திளைப்பதே உண்மையான வாழ்க்கை; மற்றவை யாவும் பூமிக்குச் சுமையானவையே.

2. நித்தியானந்தம் அடைய ராஜவீதி (ராமபக்தி) இருக்கும்போது, சந்து பொந்துகளைத் தேடுவானேன்?

3. ராமனின் நினைவே தூய்மை பயக்கும் புண்ணிய ஸ்நானம்.

4. இறைவனே! அனைத்துலகும் நீயே. எங்கென்று உன்னைத் தேடிக் காண்பேன்? யாதாகத் தொழுவேன்?

5. திருப்பணிக்கு அவ்வப்பொழுது பொருள் தந்து உதவாத பணக்காரன் இருந்தென்ன, செத்தென்ன?

6. எவ்வளவுதான் கற்றறிந்தவனுயினும், பெரியோரின் புத்திமதியைக்கேளாதவன், பக்தர்களின் பொன்மொழியான அமுதத்தைப் பருகாதவன், ஞானம் பெறமாட்டான்.

7. ராமபக்திச் செல்வத்தைப் பெற்றவரைத் தரிசித்தல் பேரானந்தம். அதைச் சொல்லித் தெரிவிக்க முடியாது; உணரத்தான் வேண்டும்.

8. ஏ மனமே! ஏமாற்ருதே! உண்மை பேசு. சுகம் அடைய எது வழி? ராமனைப் புகழ்வதா அல்லது மமதை மிக்க மாந்தரைப் புகழ்வதா?

9. மனதை வென்றவனுக்கு மந்திரமும் தந்திரமும் எதற்காக? உடல் வேறு, 'தான்' வேறு என்று உணர்ந்த பின்பு தவம் எதற்கு?

10. அமைதியின்றி இன்பம் இல்லை. செல்வம், கல்வி, மனைவி, மக்கள் எல்லாம் இருந்தாலும், ஜப தபங்கள் செய்தாலும், அமைதி ஒன்று இல்லாவிட்டால் இன்பம் என்பது இல்லை.

11. மக்கள் அனைவரும் பஜனையில் ஆழ்ந்திருப்பதைக் கண்ட யமன் தனக்கு இனி வேலை இல்லையே, மானிடர் அனைவரும் நேராகத் தாமே சுவர்க்கத்தை அடைந்துவிடுவார்களே என்ற தீவிர சிந்தனையில் மூழ்கிவிட்டான்.

12. எது வரினும் வருக. நேர்மைநெறி வழுவாமல் நடந்தால் கடவுள் கடாட்சம் உடன் வரும்.

13. சங்கீத ஞானம், பக்தியின்றி முக்தி வழியாகாது. ★

### மத ஒற்றுமை

அரசன் எல்லா நாடுகளுடனும் ஒற்றுமையை விரும்ப வேண்டும். ஆனல் தனது நாட்டின் முன்னேற்றத்தை விட்டுக்கொடுக்கக் கூடாது. அது போல் நாமும் எல்லா மதங்களின் ஒற்றுமையை விரும்ப வேண்டும். ஆனல் நமது மதத்தின் வளர்ச்சியை விட்டுக் கொடுக்கலாகாது.

—கிருஷ்ணப்ரேமி





# ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

## 1983 மே & ஜூன் மாத நிகழ்ச்சிகள்

**விசேஷ தினங்கள்:**

1-5-83 ஞாயிற்றுக்கிழமை ஸ்ரீராமாநுஜ ஜயந்தி பொதுக்கூட்டம்
மாலை 5-30 மணிக்கு தலைவர்: சுவாமி பீதாம்பரானந்தர்
பேசுபவர்: குமாரவாடி சே. ராமாநுஜாசாரியர்

17-5-83 செவ்வாய் ஸ்ரீசங்கர ஜயந்தி

22-5-83 ஞாயிறு ஸ்ரீசங்கர ஜயந்தி பொதுக்கூட்டம்
மாலை 5-30 மணிக்கு தலைவர்: சுவாமி பீதாம்பரானந்தர்
பேசுபவர்:

26-5-83 வியாழன் புத்த பௌர்ணிமா

29-5-83 ஞாயிறு ஸ்ரீபுத்த ஜயந்தி பொதுக்கூட்டம்
மாலை 5-30 மணிக்கு தலைவர்: சுவாமி பீதாம்பரானந்தர்
பேசுபவர்:

10-6-83 வெள்ளி பலஹாரிணி காளி பூஜை

மே 8, 22 & ஜூன் 7, 21 ஆகிய ஏகாதசி தினங்களில் மாலை வழிபாட்டிற்குப் பிறகு ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம் நடைபெறும்.

**சத் சங்கம்:** ஞாயிறுதோறும் மாலை 4 மணி முதல் 5-30 மணி வரை

1. ஸ்ரீவிஷ்ணு ஸஹஸ்ரநாமம்—வி. ஆர். கல்யாணசுந்தர சாஸ்திரிகள் மே 8 & ஜூன் 5
2. ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாமம்—வி.எஸ்.வி. குருஸ்வாமி சாஸ்திரிகள் மே 15 & ஜூன் 12
3. ராமாயணம்—ஆர். கோதண்டராமன் (ஜூன் 19 & 26)

மாலை 5-30 மணி முதல் 6-30 மணி வரை சுவாமி பீதாம்பரானந்தர் 'ஸ்ரீமத் பாகவதம்' என்ற தலைப்பில் ஞாயிற்றுக்கிழமைகளில் ஆங்கிலத்தில் உரை நிகழ்த்துவார்.

**வார நாட்களில் நடைபெறும் சொற்பொழிவுகள் (மாலை 5-30 மணிக்கு)**

1. திங்கள் ஸ்ரீராமகிருஷ்ணரின் உபதேசங்கள்—சுவாமி அமிர்தானந்தர்
2. செவ்வாய் வைராக்கிய சதகம்—சுவாமி பிரசாந்தானந்தர்
3. புதன் ஆன்மிக வாழ்க்கை—சுவாமி கமலாத்மானந்தர்
4. வியாழன் பகவத்கீதை—பிரம்மசாரி சின்மய சைதன்யா
5. வெள்ளி துளசி ராமாயணம்—சுவாமி வீதபயானந்தர்
6. சனி அத்யாத்ம ராமாயணம்—பி. ராமகிருஷ்ணன் (மே 7 & ஜூன் 4 மட்டும்)
7. சனி மனமும் அதை அடக்கும் முறையும் —சி. எஸ். பிள்ளை (மே 21 & ஜூன் 18 மட்டும்)

**வேறு சில நிகழ்ச்சிகள்:**

வேறு சில நிகழ்ச்சிகள் என்ற தலைப்பில் கடந்த இதழில் தரப்பட்ட சொற்பொழிவுகள் அனைத்தும் மே & ஜூன் மாதங்களிலும் வழக்கம் போல் நடைபெறும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்துகொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்

ஸ்ரீராமகிருஷ்ண மடம், சென்னை-600 004

தொலைபேசி: 71231




# சுவாமி துரியானந்தர்

**சுவாமி துரியானந்தர்:** எல்லாமே ஹிப்நாடிஸம்தான் (வசிய மயக்கம்தான்) அதாவது மாயையின் விளையாடல்!

ஹிப்நாடிஸ நிகழ்ச்சிகள் பார்த்திருக்கிறீர்களா? ஹிப்நாடிஸ ஆதிக்கத்தில் கட்டுப்பட்டுள்ள ஒருவனுக்கு, அம்மாதிரி யோசனை கொடுத்தால் அவன் நிலத்தின் மீதே நீந்த ஆரம்பித்துவிடுவான். திவ்ய மயக்குக்காரி (மகாமாயை) நம் யாவரையும் 'ஹிப்நாடிஸ்' செய்திருக்கிறாள்.

முறையே ஞானத்துக்கும் அஞ்ஞானத்துக்கும் இட்டுச் செல்பவையான வித்யா மாயை, அவித்யா மாயை என்ற இரண்டுமே ஹிப்நாடிஸம்தான். இவற்றில் ஒன்றை (அவித்யா மாயையை) மற்றதன் (வித்யா மாயையின்) துணைகொண்டு நாம் அழிக்க வேண்டும். ஏனெனில், ஞானம் என்பதே அஞ்ஞானத்தின் எதிரிடை.

சுவாமிஜி (விவேகானந்தர்) சொல்லும் கதை உங்களுக்குத் தெரியும் அல்லவா? ஒரு முகம்மதியரின் உணவில் ஒரு பகுதியை ஒரு குள்ளநரி தின்றுவிட்டது. குள்ளநரியோ முகம்மதியர்களால் மிகவும் அசுத்தமாக (அசுசியானதாக)க் கருதப்படுவது. எனவே, நரி தீண்டியதைப் புசித்தால் தோஷமுற்றதாகக் கருதிய அந்த மனிதர் ஒரு முல்லாவிடம் போய் அவரிடம் இது விஷ''மாக ஆலோசனை கோரினார். ''நாய் குள்ள நரிக்கு விரோதி. எனவே உனக்கு நாய் தின்று மிகுந்த உணவு கிடைக்குமானால், தோஷம் போய்விடும்'' என்றார் முல்லா. (சிரிப்பு.) அதாவது நாம் அவித்யையை வித்யையால்-அஞ்ஞானத்தை ஞானத்தால்-அழிக்க வேண்டும்.

**சீடர்:** பிறகு வித்யையை அழிக்க வேறு எதுவோ ஒன்று வேண்டியிருக்குமா?

**சுவாமி துரியானந்தர்:** அல்ல. வித்யை ஒருவனை மெய்ப்பொருளிடம் கொண்டு விட்டுவிட்டுத் தானாகவே இல்லாமற் போய்விடும். உனக்கு ஸ்ரீராமகிருஷ்ணர் கூறிய மூன்று திருடர்களைப் பற்றிய கதை நினைவில்லை?*

*ஒரு வழிப்போக்கனை மூன்று திருடர்கள் ஒரு காட்டிலே தாக்கி அவனிடம் இருந்ததையெல்லாம் பறித்துவிட்டனர். அவர்களில் ஒரு திருடன் வழிப்போக்கனைக் கொன்றுவிட விரும்பினான். ஆனால் அப்படிச் செய்வதை இன்னொரு திருடன் தடுத்து நிறுத்தினான். ஆதலால் மூன்று திருடர்களும் சேர்ந்து வழிப்போக்கனின் கைகால்களைக் கட்டிப் போட்டுப் போய்விட்டனர்.

சிறிது நேரம் சென்றபின் வழிப்போக்கன் கட்டப்பட்டிருந்த இடத்துக்கு மூன்றாவது திருடன் வந்தான். அவன் வழிப்போக்கனைக் கட்டவிழ்த்துவிட்டான். அது மட்டுமின்றி அந்த மூன்றாவது திருடன் வழிப்போக்கனைக் காட்டிலிருந்து நெடுஞ்சாலைக்கு அழைத்துச் சென்றும் விட்டான். அங்கிருந்து வழிப்போக்கனின் வீடு கண்ணுக்கெட்டிய தூரத்தில்தான் இருந்தது. நன்றி காரணமாக, வழிப்போக்கன் அந்த மூன்றாவது திருடனைத் தன் வீட்டுக்கு அழைக்க விரும்பினான். ஆனால் இரக்கம் காட்டிய திருடன் வழிப்போக்கனின் அழைப்பை ஏற்கவில்லை. தான் அங்கு வந்தால் போலீஸார் தன்னைப் பிடித்துக் கொள்வார்கள் என்று அவன் காரணம் காட்டினான்.

ஸ்ரீராமகிருஷ்ணர் சத்துவம் ரஜஸ் தமஸ் என்ற முக்குணங்களை மேற்கூறிய மூன்று திருடர்களுக்கு ஒப்பிட்டுக் கூறியுள்ளார். தமஸ் அழித்தே விடுவது, ரஜஸ் பந்தத்தில் ஆழ்த்துவது, சத்துவம் விடுதலையளிப்பது. ஆனால் அந்தச் சத்துவகுணமும் ஒரு திருடன் தான். அதுவும் பிரம்ம சாட்சாத்காரத்தின் முன் நிற்க முடியாது. இங்கே வித்யை என்று சொன்னது சத்துவத்தைக் குறிப்பதேயாகும்.

**சுவாமி துரியானந்தர்—** மகாபாரதத்தில் உத்தராயணத்தைப்பற்றி ஒரு குறிப்பு இருக்கிறது. பீஷ்மர் உத்தராயணத்துக்காகக் காத்துக்கொண்டிருந்தார் என்று அது கூறுகிறது. இங்கே உத்தராயணம் என்பது ஒரு குறிப்பிட்ட காலம் என்று பொருள்படாது. பீஷ்மருக்கு ஸ்வச்சந்த மரணசக்தி என்பதான (தனது மரண காலத்தைத் தானே தன் விருப்பப்படி தேர்ந்தெடுத்துக் கொள்ளக்கூடிய) ஆற்றல் இருந்தது என்பது மட்டுமே இங்கே தெரிவது.

உத்தராயணம் என்ற பதத்துக்கு எந்த ஒரு காலத்தையும் சாஸ்திரங்கள் பொருளாகக் கொள்ளவேயில்லை. அந்தக் காலத்தோடு தன்னை ஐக்கியமுற்றவனாகக் கருதும் தேவனையே உத்தராயணம் என்ற பதம் குறிக்கிறது. இதை நாம் நன்கு புரிந்துகொள்ள முடியும். மதிப்புக்கு உகந்த ஒரு பெரியவர் வரும்போது அவரை எதிர்கொண்டு வரவேற்கப் பலர் முன்னே செல்வது போன்றதுதான் இது. இது தொடர்பாக எனக்கு ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது.**

**B** தமது தந்தை நோயுற்றிருப்பதாகச் செய்தி பெற்றார். அவர் அங்கே போய்ச் சேருவதற்கு முன்பே, தகப்பனார் காலமாகிவிட்டார். அந்த அறைக்குள் **B** அடி வைத்ததுமே ஓர் ஒளியுருவத்தைக் கண்டார். இதுபற்றி அவர் எனக்கு எழுதினார். முதலில், தந்தைதாம் தம்மைச் சந்திப்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார் என்று **B** நினைத்தாராம். ஆனால் உடனே, உடலை விட்டுப் பிரிந்த அவரது உயிரை அழைத்துப் போக வந்த

**உத்தராயணம் என்பதனால், நாம் பொதுவாகக் குறிப்பிடும் தை முதல் ஆனி முடியும் வரையிலான ஆறு மாதத்தில் ஒருவர் மரணம் அடைந்தாலே அவர் முக்தி எய்த முடியும் என்ற கருத்தை, சுவாமி துரியானந்தர் இங்கு மறுக்கிறார்.

அந்தக் கால கட்டத்துக்கு அதிதேவதையாக ஒரு தெய்வம் இருப்பதாகவும், அந்தத் தெய்வம் வீடு பேற்றுக்கு உரியவரின் ஆவியை மேலுலகிலிருந்து எதிர்கொண்டு வரவேற்று இறைவனிடம் அழைத்துச் செல்கிறது என்றும், குறிப்பிட்ட அந்தத் தெய்வம் மேற்சொன்ன ஆறு மாதங்களில் மட்டுமின்றி எப்போதும் இந்தப் பணியைச் செய்கிறது என்றும் சுவாமி துரியானந்தர் கருதுவதாகத் தெரிகிறது.

துரியானந்தர் கருத்துப்படி, பீஷ்மர் உயிர் நீப்பதற்கு முடிவு செய்துவிட்டு, தமது உயிரை வரவேற்று இட்டுச் செல்ல வேண்டிய உத்தராயண **தேவதைக்குக்** காத்திருந்தாரேயன்றி, உத்தராயணம் எனப்படும் **காலத்துக்காகக்** காத்திருக்கவில்லை என்று ஆகிறது.—தமிழாக்கியோன்.



துளசி மகாலட்சுமியின் அம்சம். துளசி இலைகள் உஷ்ணத்தைக் கொடுக்கக் கூடியவை. எனவே, நீருக்கு அதிபதியான மகாவிஷ்ணுவிற்குத் துளசியால் அர்ச்சனை செய்கிறார்கள்.

—ராதா ராமமூர்த்தி

தங்களால் வெற்றி பெற முடியும் என்ற நம்பிக்கை உடையவர்கள் நிச்சயம் வெற்றி பெற்றே தீருவார்கள்.

—ஜான் ட்ரைடன்

கானல்நீர் போன்ற இந்த வாழ்க்கை நிலையானதல்ல என்பதை அறிந்து, நல்லோருடன் இணங்கி வாழ்ந்து கடமையைச் செய்து, மகிழ்ச்சி அடைய வேண்டும்.

—ஹிதோபதேசம்

கவலையில் ஆண்டவனைப் பிரார்த்திக்கும்போது அடுத்து என்ன செய்ய வேண்டும் என்பது தெளிவாகிறது.



ஏதோ ஒரு தேவதையாகவே அந்த ஒளியுருவம் இருக்க வேண்டும் என்று அவர் அறிவில் பளிச்சிட்டதாம். B இல்லாததைச் சொல்லமாட்டார் என்பது தெரிந்ததே. அவர் அப்படிச் செய்யக்கூடியவரே அல்ல. அதுவுமின்றி, பகவத்கிதை தெரிவிக்கும் பின்வரும் கருத்துப் போன்ற விஷயங்களை என்னல் நன்கு புரிந்துகொள்ள முடிகிறது:—

''ஆன்மா எப்போது உடலிலிருந்து வெளியேறுகிறது என்பதையோ, எப்போது அதில் வசிக்கிறது என்பதையோ, குணங்களின் துணையில் எப்போது (உடல் மூலம்) விஷயானுபவங்களை நுகர்கிறது என்பதையோ அறிவீனர்கள் காண்பதில்லை. ஆனல், ஞானியர் அதுவே (ஆன்மாவே) இவை அனைத்தையும் செய்வதாகக் காண்கின்றனர்'' என்று கீதை கூறுகிறது.

''வெறும் நூலறிவு மட்டும் கொண்ட பண்டிதரைவிட ஒரு பிசாசையேனும் கண்டவன் மேலானவன்'' என்று சுவாமிஜி சொல்வதுவழக்கம். ஏனெனில், இந்த வாழ்க்கை முடிந்தபின் எதிர்கால வாழ்வு ஒன்று உண்டு என்பதில் (மரணத்துக்குப் பின்னரே உண்டாவதான பிசாசைப் பார்த்த) அவன் உறுதியான கருத்துப் பெற வாய்ப்புக் கிடைத்து விடுகிறது. ★

---

# சந்தாதாரர்கள் கவனிக்க

* சந்தா எண் 60,000 முதல் 60,344 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை மே மாதத்துடன் முடிவடைகிறது. மேற்கொண்டு பத்திரிகையைத் தொடர்ந்து அனுப்ப, அடுத்த ஆண்டுச் சந்தாத் தொகை ரூ. 15ஐ மே 25-ஆம் தேதிக்குள் அனுப்பி வைக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறோம்.

* சந்தா எண் 70,001 முதல் 71,508 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூன் மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 80,001 முதல் 80,292 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஜூலை மாதத்துடன் முடிவடைகிறது.

* சந்தா எண் 90,001 முதல் 90,685 வரையிலும் உள்ள அன்பர்களின் சந்தாத் தொகை ஆகஸ்ட் மாதத்துடன் முடிவடைகிறது.

சந்தாவைக் கூடிய விரைவில் முன்னதாகவே செலுத்துவதனல் பல சங்கடங்களையும் குழப்பங்களையும் தவிர்க்க முடிகிறது.

ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ள விரும்பும் ஆண்டுச் சந்தாதாரர்கள், தாங்கள் செலுத்தியுள்ள ரூ. 15 போக மீதி ரூ. 165—யைச் செலுத்தி ஆயுள் சந்தாதாரராகத் தங்களைப் பதிவு செய்துகொள்ளலாம். தொகையை மொத்தமாகவோ, பகுதி பகுதியாகவோ 15 மாதங்களுக்குள் செலுத்தலாம். ஆயுள் சந்தாதாரராகச் சேருவது பத்திரிகையின் வளர்ச்சிக்குப் பெரிதும் உதவி செய்வதாகும்.

நிர்வாகி,

**ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்**

